# தேர்ந்தெடுக்கப்பட்ட

# 80 நபிமொழிகள்

## பகுதி - 4

1436-2015

- ❖ அறிவிப்பாளர் பற்றி சிறுகுறிப்பு
- ❖ சிறு விளக்கங்களுடன்


தொகுப்பு

கலாநிதி முஹம்மத் முர்தழா ஆஇஷ்

தமிழில்

எம். அஹ்மத் அப்பாஸி



போட்டி ஏற்பாடு

ரப்வா இஸ்லாமிய அழைப்பு நிலையம்- ரியாத்

சவூதி அரேபியா

# مختارات من السنة

مع تراجم الرواة والفوائد العلمية لثمانين حديثا

الجزء الرابع

تأليف : الدكتور/ محمد مرتضى بن عائش محمد

ترجمة : أحمد بن محمد

**الإشراف والمتابعة**

قسم الدعوة وتوعية الجاليات

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات في الربوة، الرياض

بالمملكة العربية السعودية

## பொருளடக்கம்

بسم الله الرحمن الرحيم

அளவற்ற அருளாலனும் நிகரற்ற
அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின்
திருப்பெயரால்

**முன்னுரை**

அகிலத்தாரைப் படைத்துப் பரிபாலிக்கும் ஏக நாயன் அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும். இறுதிமுடிவு இறையச்சமுள்ளோருக்கே. சாந்தியும் சமாதானமும் நபிமார்கள் ரஸூல்மார்கள் அனைவருக்கும் தலைவரான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் கிளையார்கள், தோழர்கள் மற்றும் மறுமை வரை அவர்களைத் துயரும் அனைவர் மீதும் உண்டாவதாக.

இஸ்லாத்தில் ஸுன்னாவுக்கு மாபெரும் முக்கியத்துவம் உள்ளது. ஏனெனில் குர்ஆனுக்குப் பிறகு இஸ்லாத்தின் பிரதான மூலாதாரம் இந்த ஸுன்னாதான். எனவே அனுமதிக்கப்பட்ட அனைத்து வழிமுறைகளையும் பயன்படுத்தி இதில் கவனம் எடுப்பது முஸ்லிம்களுக்கு அவசியமாகும்.

இந்த ஸுன்னாவில் கரிசனையெடுப்பவர்களுக்கு நபியவர்கள் பிரார்த்தனை செய்துள்ளார்கள். எங்களிடமிருந்து ஒரு செய்தியையாவது கேட்டு அதனை (ஏனையோருக்கு) எத்திவைப்பவரை அல்லாஹ் ஒளிமயமாக்குவானாக! ஏனெனில்

கேட்டவரை விட எத்திவைக்கப்படுபவர் மனனசக்தி அதிகமானவராக இருப்பார் என்று நபியவர்கள் கூறினார்கள். (திர்மிதீ 2657, இப்னுமாஜா∴ 232).

அதனால் அல்லாஹ்வின் உதவியுடன் அடிப்படைக் கொள்கை, சட்டதிட்டங்கள், பண்பாடுகள் சம்பந்தப்பட்ட சில நபிமொழிகளைத் தெரிவு செய்ய முயற்சித்துள்ளதுடன், அவற்றில் ஒவ்வொரு நபிமொழியுடனும் சம்பந்தப்படும் மார்க்க சட்டதிட்டங்களையும் கூறுயிருக்கிறேன். ஈருலகிலும் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு, முஸ்லிம்கள் நபியவர்களை நேசத்தடனும், கண்ணியத்துடனும் பின்பற்ற வேண்டும் என்பதற்காகவே தொகுத்துள்ளேன்.

நபிமொழிகளுக்குப் படிப்பினைகள் கூறும்போது, இஸ்லாத்திற்கு சேவைசெய்த இமாம் நவவீ (ரஹ்), இமாம் இப்னு ஹஜர் (ரஹ்), போன்ற அறிஞர்களின் கூற்றுக்களிலிருந்து பயன்பெற முனைந்துள்ளேன். அல்லாஹ் அவர்களுக்கு நற்கூலி வழங்குவானாக.

இதற்கு முன்னரும் அல்லாஹ்வின் உதவியால் “தேர்ந்தெடுக்கப்பட்ட நபிமொழிகள்” என்ற பெயரில் மூன்று பாகங்கள் எழுதியுள்ளேன். அல்லாஹ்வின் அனுகூலத்தால் அதற்கு வரவேற்புக் கிடைத்தது. அதேபோன்று இத்தொகுப்பும் ஏற்புடையதாக வேண்டுமென்று அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றேன்.

இந்நபிமொழிகளின் தரங்களைப் பொறுத்தவரையில்: அந்நபிமொழி புஹாரி, முஸ்லிம் ஆகிய இரு கிரந்தங்களிலிருந்து எடுக்கப்பட்டதாக இருந்தால் அதன் தரத்தைக் கூறத்தேவையில்லை. ஏனெனில் அவ்விரண்டிலும் இடம்பெற்றுள்ள நபிமொழிகள் ஆதாரபூர்வமானவை என்பது இச்சமூகத்தில் (எற்கப்படும்) அனைத்து அறிஞர்களின் கருத்தாகும்.

அபூதாவூத், திர்மிதீ, நஸாஈ, இப்னுமாஜ.ஃ. போன்ற கிரந்தங்களில் இடம்பெற்றுள்ள நபிமொழியாக இருந்தால், ஹதீஸ்கலை மேதை அஷ்ஷேஹ் முஹம்மத் நாஸிருத்தீன் அல்அல்பானீ (ரஹ்) அந்நபிமொழிக்குக் கூறியுள்ள தரத்தை இங்கு நானும் கூறியுள்ளதுடன், திர்மிதீயில் இடம் பெற்றுள்ள நபிமொழிகளுக்கு இமாம் திர்மிதீயே வழங்கியுள்ள தீர்ப்பையும் கூறியுள்ளேன். அல்லாஹ் அனைத்து அறிஞர்களுக்கும் அருள்புரிவானாக.

பின்னர் அழைப்புப்பணிக்கு சகல விதத்திலும் பயன்படும் சிறந்த வழிகாட்டல்களை எமக்குத் தந்துதவும் ரியாத் மாநகரத்திலுள்ள ரப்வா இஸ்லாமிய அழைப்பு நிலையத்தின் நிர்வாகத் தலைவர் அஷ்ஷேஹ் காலித் இப்னு அலீ அபல்கைல் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவிக்கிறேன்.

அதேபோன்று இப்போட்டியை நடத்த மிகவும் ஆர்வத்துடன் மேற்பார்வை செய்த, ரியாத் மாநகரத்தின் ரப்வா அழைப்பு நிலையத்தில்

சனசமூகப்பிரிவுப் பொறுப்பாளர் அஷ்ஷேஹ் நாஸிர் இப்னு முஹம்மத் அல்ஹுவைஷ் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதேபோன்று எனக்கு பயனளிக்கும் பல நல்ல கருத்துகள், ஆலோசனைகள் வழங்கிய இந்நிலையத்தில் பணிபுரியும் எனது சகோதர அழைப்பாளர்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக, அழைப்புப் பிரிவின் செயலாளர் சகோதரர் அப்துல்அஸீஸ் மழ்ஊப் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அல்லாஹ் அனைவருக்கும் ஈருலக நலவுகளையும் வழங்குவானாக. நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் கிளையார்கள், தோழர்கள், மறுமை வரை அவர்களின் வழியில் சென்ற அனைவர் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக. அகிலத்தாரைப் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்.

கலாநிதி முஹம்மத் முர்தழா ஆஇஷ் முஹம்மத்

1436- 2- 7 (29- 11- 2014)

தமிழில்

எம். அஹ்மத் (அப்பாஸி)

### சுவனத்தின் வழி ஏகத்துவமே

١ - عَنْ عُثْمَانَ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللهِ ﷺ: "مَنْ مَاتَ وَهُوَ يَعْلَمُ أَنَّهُ لاَ إِلَهَ إِلاَّ اللهُ دَخَلَ الْجَنَّةَ".

(صحيح مسلم، رقم الحديث ٤١ - (٢٦)، ).

(1) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று அறிந்த நிலையில் யார் மரணிக்கிறாரோ அவர் சுவனம் நுழைவார்.

அறிவிப்பவர் : உஸ்மான் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 26.

**✍ஹதீஸ் அறிவிப்பாளர்:**

உஸ்மான் பின் அப்பான் பின் அபில் ஆஸ் என்ற இவர் நபியவர்கள் பிறந்த பின் (யானை வருடம்) மூன்றாம் ஆண்டு மக்காவில் பிறந்தார்கள். நபித்துவம் கிடைத்து சில நாட்களிலேயே இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட இவர் பிற்காலத்தில் மூன்றாம் கலீபாவாக அமீருல் மு..மினீன் என்ற சிறப்புப் பெயருடன் இருந்தார். மக்காவிலிருந்து எத்யோபியாவுக்கு முதலில் ஹிஜ்ரத் செய்தது உஸ்மான் மற்றும் நபியவர்களின் மகள் ருகைய்யா தம்பதியினர்தான். தனது உடலாலும் பொருளாலும் இஸ்லாத்திற்கு உதவி செய்தார்கள். தபூக்

யுத்தத்தின் போது 950 ஒட்டகங்களும் 50 குதிரைகளும் வழங்கி படையைத் தயார் செய்ததுடன், மதீனாவிலுள்ள ரூமா∴ என்ற கிணற்றை 20 ஆயிரம் வெள்ளிக்காசுகள் கொடுத்து வாங்கி தர்மம் செய்தார்கள். மேலும் மஸ்ஜிதுந் நபவியை விரிவாக்கவும் தனது பணத்திலிருந்து 25 ஆயிரம் வெள்ளிக்காசுகள் செலவளித்தார்கள். உமர் (ரலி) அவர்களின் மரணத்திற்குப் பின் ஹி.23ல் கலீபாவாகத் தெரிவு செய்யப்பட்டார்கள். அல்குர்ஆனில் கருத்து வேறுபாடு ஏற்படாமல் அதனைப் பாதுகாத்தார்கள். ஆசிய, ஆபிரிக்காக் கண்டங்களில் இஸ்லாமிய வெற்றி இவரது ஆட்சிக் காலத்தில் பரவியது. நபியவர்களைத் தொட்டும் 146 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள். ஹி. 35ம் ஆண்டு தனது 82வது வயதில் மதீனாவில் தனது வீட்டிலே கிளர்ச்சியாளர்களால் அநியாயமாகக் கொலை செய்யப்பட்டார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஏகத்துவக் கலிமாவை ஏற்றுக் கொண்டு இணைவைப்பு, இறைநிராகரிப்பு, பெரும்பாவங்கள் ஆகியவற்றிலிருந்து தவிர்ந்தவர் கண்டிப்பாக சுவனம் நுழைவார் என்பதை இந்நபிமொழி ஆணித்தரமாகக் கூறுகின்றது.

(2) உள்ரங்கமாகவும் வெளிரங்கமாகவும், கொள்கை, செயல், நடத்தை அனைத்திலும்

ஏகத்துவக் கலிமாவைப் பற்றிப் பிடிப்பது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

(3) இணைவைப்பு, இறைநிராகரிப்பு போன்ற ஏகத்துவக் கலிமாவைப் பாதிக்கும் அனைத்தையும் தவிர்ந்து கொள்ளவேண்டும்.

### ஸூரதுல் பகராவின் இறுதி இருவசனங்களின் மகிமை

٢ - عَـنْ أَبِـيْ مَسْـعُوْدٍ ﷺ، قَـالَ: قَـالَ النَّبِـيُّ ﷺ: "مَـنْ قَـرَأَ بِالْآيَتَيْنِ مِنْ آخِرِ سُورَةِ البَقَرَةِ فِي لَيْلَةٍ كَفَتَاهُ".

(صحيح البخاري، رقم الحديث ٥٠٠٩، وصحيح مسلم، رقم الحديث ٢٥٦ - (٨٠٨)، واللفظ للبخاري).

(2) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யாராவது ஓர் இரவில் ஸூரதுல் பகராவின் இறுதி இரு வசனங்களையும் ஓதினால் அவை அவரைப் பாதுகாக்கும்.

அறிவிப்பவர் : அபூ மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : புஹாரி 5009, முஸ்லிம் 808.

**☞அறிவிப்பாளர் பற்றி :**

அபூ மஸ்ஊத் என்ற புனைப்பெயருடைய உக்பா பின் அம்ரு அல்அன்ஸாரீ என்பவர் ஒரு பிரபலமான நபித்தோழராவார். நபி (ஸல்) அவர்களுக்கும் மதீனாவாசிகளுக்கும் இடையில் நடைபெற்ற 2ம் உடன்படிக்கையில் கலந்து கொண்டார்கள். அப்போது அக்கூட்டத்தில் மிகச்சிறிய வயதினராக இருந்தார். உஹத் மற்றும் அதன் பின் நடந்த அனைத்துப் போர்களிலும் நபியவர்களுடன் கலந்து கொண்டார்கள். பின்பு கூபா சென்று தனக்கு ஒரு வீட்டைக் கட்டிக்கொண்டார்கள். அலீ (ரலி) அவர்கள் ஸிப்ஃபீன் போருக்குப் புறப்படும் போது கூபாவிற்கு இவர்களைப் பிரதிநிதியாக நியமித்துச் சென்றார்கள். நபியவர்களைத் தொட்டும் இவர்கள் அறிவித்த பொன்மொழிகள் 102 ஆகும். ஹிஜ்ரி 41ல் மதீனாவில் மரணித்தார்கள். (வேறு சில கருத்துக்களும் இதில் கூறப்பட்டுள்ளன.)

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒவ்வோர் இரவிலும் இவ்விரு வசனங்களையும் ஓதிவருவது வெற்றி பெறுவும் கெடுதிகளிலிருந்து பாதுகாப்புப் பெறுவும் வழிவகுக்கும்.

(2) ஒவ்வோர் இரவிலும் இவ்விரு வசனங்களையும் ஓதிவருவது அல்லாஹ்வின் மீதுள்ள மனிதனின் நம்பிக்கையைப் பலப்படுத்தும்.

(3) இவ்விரு வசனங்களையும் மனனமிடுவது முஸ்லிமுக்கு அவசியமாகும். அவை பின்வருமாறு :

﴿ ءَامَنَ ٱلرَّسُولُ بِمَآ أُنزِلَ إِلَيۡهِ مِن رَّبِّهِۦ وَٱلۡمُؤۡمِنُونَۚ كُلٌّ ءَامَنَ بِٱللَّهِ وَمَلَٰٓئِكَتِهِۦ
وَكُتُبِهِۦ وَرُسُلِهِۦ لَا نُفَرِّقُ بَيۡنَ أَحَدٖ مِّن رُّسُلِهِۦۚ وَقَالُواْ سَمِعۡنَا وَأَطَعۡنَاۖ
غُفۡرَانَكَ رَبَّنَا وَإِلَيۡكَ ٱلۡمَصِيرُ ٢٨٥ لَا يُكَلِّفُ ٱللَّهُ نَفۡسًا إِلَّا وُسۡعَهَاۚ لَهَا مَا
كَسَبَتۡ وَعَلَيۡهَا مَا ٱكۡتَسَبَتۡۗ رَبَّنَا لَا تُؤَاخِذۡنَآ إِن نَّسِينَآ أَوۡ أَخۡطَأۡنَاۚ رَبَّنَا وَلَا
تَحۡمِلۡ عَلَيۡنَآ إِصۡرٗا كَمَا حَمَلۡتَهُۥ عَلَى ٱلَّذِينَ مِن قَبۡلِنَاۚ رَبَّنَا وَلَا تُحَمِّلۡنَا مَا لَا
طَاقَةَ لَنَا بِهِۦۖ وَٱعۡفُ عَنَّا وَٱغۡفِرۡ لَنَا وَٱرۡحَمۡنَآۚ أَنتَ مَوۡلَىٰنَا فَٱنصُرۡنَا عَلَى ٱلۡقَوۡمِ
ٱلۡكَٰفِرِينَ ٢٨٦ ﴾ ، ( سورة البقرة، الآيتان ٢٨٥ ــ ٢٨٦).

பொருள் :

(இறை) தூதரும் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்றதை நம்புகிறார் (அவ்வாறே) மு.்.மின்களும் (நம்புகின்றனர் இவர்கள்) யாவரும் அல்லாஹ்வையும், அவனுடைய மலக்குகளையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும் நம்புகிறார்கள். “நாம் இறை தூதர்களில் எவர் ஒருவரையும் பிரித்து வேற்றுமை பாராட்டுவதில்லை (என்றும்) இன்னும் நாங்கள் செவிமடுத்தோம் (உன் கட்டளைகளுக்கு) நாங்கள்

வழிப்பட்டோம் எங்கள் இறைவனே! உன்னிடமே மன்னிப்புக் கோருகிறோம் (நாங்கள்) மீளுவதும் உன்னிடமேதான்" என்று கூறுகிறார்கள்.

அல்லாஹ் எந்த ஓர் ஆத்மாவுக்கும் அது தாங்க முடியாத அளவு கஷ்டத்தை கொடுப்பதில்லை. அது சம்பாதித்ததின் நன்மை அதற்கே, அது சம்பாதித்த தீமையும் அதற்கே! (மு.ஃமின்களே! பிரார்த்தனை செய்யுங்கள்) "எங்கள் இறைவா! நாங்கள் மறந்து போயிருப்பினும், அல்லது நாங்கள் தவறு செய்திருப்பினும் எங்களைக் குற்றம் பிடிக்காதிருப்பாயாக! எங்கள் இறைவா! எங்களுக்கு முன் சென்றோர் மீது சுமத்திய சுமையை போன்று எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் இறைவா! எங்கள் சக்திக்கப்பாற்பட்ட (எங்களால் தாங்க முடியாத) சுமையை எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் பாவங்களை நீக்கிப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னித்தருள் செய்வாயாக! எங்கள் மீது கருணை புரிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன் கா.ஃபிரான கூட்டத்தாரின் மீது (நாங்கள் வெற்றியடைய) எங்களுக்கு உதவி செய்தருள்வாயாக!" (அல்பகரா : 285, 286).

## நபிமொழிகளைப் பரப்புபவனின் சிறப்பு

**٣ -عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُوْدٍ ﷺ، عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "نضَّرَ اللهُ امْرَأً، سَمِعَ مِنَّا حَدِيْثاً؛ فَبَلَّغَهُ؛ فَرُبَّ مُبَلِّغٍ أَحْفَظُ مِنْ سَامِعٍ".**

(سنن ابن ماجه، رقم الحديث ٢٣٢، وجامع الترمذي، رقم الحديث ٢٦٥٧، واللفظ لابن ماجه، قَالَ الإمام الترمذي عن هذا الحديث: حسن صحيح، وصححه الألباني).

(3) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : என்னிடமிருந்து ஒரு செய்தியையாவது கேட்டு அதனை (ஏனையோருக்கு) எத்திவைப்பவரை அல்லாஹ் ஒளிமயமாக்குவானாக! ஏனெனில் கேட்டவரைவிட எத்திவைக்கப்படுபவர் அதிக மனன சக்தி உள்ளவராக இருப்பார்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : திர்மிதீ 2657, இப்னுமாஜ.். 232. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

☞ **அறிவிப்பாளர் பற்றி :**

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) நபித் தோழர்களில் பிரபலமானவரும், மிகத் திறமையாக அல்குர்ஆனை ஓதக் கூடியவருமாவார். இவர்கள் நபியவர்களிடமிருந்து அறிவித்த நபிமொழிகள் 848. நபியவர்களுடன் அனைத்து யுத்தங்களிலும் கலந்து கொண்டார்கள். நபியவர்களின் மரணத்திற்குப் பின் யர்மூக் போரில் கலந்து கொண்டார்கள். கலீபா உமர் (ரலி) அவர்கள் தனது ஆட்சிக் காலத்தில் கூபாவிற்கு மார்க்கத்தைக் கற்றுக்கொடுக்க இவர்களை அனுப்பினார்கள். பின்னர் உஸ்மான் (ரலி) அவர்கள் தனது ஆட்சியில் அதே கூபாவிற்கு கவர்னராக நியமித்தார்கள். பின்னர் மதீனாவிற்குத் திரும்பும்படி ஏவினார்கள். தனது 60க்கும் 70க்கும் இடைப்பட்ட வயதில் ஹிஜ்ரி 32 ம் ஆண்டு மதீனாவில் மரணித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இந்நபிமொழியின் கருத்து என்னவெனில் : நபியவர்களின் ஸுன்னாவை பரப்புவதில் கரிசனை எடுப்பவர்களுக்கு ஈருலகிலும் உயர்பதவியைக் கொடுத்து, அவரை அழகு படுத்தி சுவனத்திலும் பேரின்பம், ஒளிமயத்தின்பால் அவரைச் சேர்த்து வைப்பான்.

(2) நபியவர்களுடைய பொன்மொழிகளை உளத் தூய்மையுடனும் அமானிதத்துடனும் கரிசனை எடுப்பவருக்கு சுவனத்தில் பேரின்பம், ஒளிமயம் கிடைக்க வேண்டும் என்ற நபியவர்களின் துஆவை இந்நபிமொழி உள்ளடக்கியுள்ளது.

(3) ஆதாரபூர்வமான நபிமொழிகளை மார்க்கம் அனுமதித்துள்ள அனைத்து வழிமுறைகளிலும் பரத்த வேண்டும் என்பதை இந்நபிமொழி தூண்டுகிறது.

### ஏகத்துவத்திற்குக் கலங்கம் ஏற்படுத்தாதிருத்தல்

**٤ - عَنْ حُذَيْفَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "لاَ تَقُوْلُوْا: مَا شَاءَ اللّٰهُ وَشَاءَ فُلاَنٌ؛ وَلٰكِنْ قُوْلُوْا: مَا شَاءَ اللّٰهُ، ثُمَّ شَاءَ فُلاَنٌ".**

(سنن أبي داود، رقم الحديث ٤٩٨٠، وصححه الألباني).

(4) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்வும் இன்னாரும் நாடினார்கள் என்று நீங்கள் கூறாதீர்கள். எனினும் அல்லாஹ் நாடினான். பின்னர் இன்னார் நாடினார் என்று கூறுங்கள்.

அறிவிப்பவர் : ஹுதைபா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 4980. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

**☞அறிவிப்பாளர் பற்றி :**

ஹுதைபா பின் அல்யமான் பின் ஹுஸைல் அல்அப்ஸீ பிரபலமான வீர நபித்தோழர்களில் ஒருவர். இஸ்லாத்தின் நிறைய வெற்றிகளில் இவருக்கும் பங்குண்டு. நபி (ஸல்) அவர்களுடைய இரகசியத் தோழர் என்றழைக்கப்பட்ட இவர் 255 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள். கன்தக் மற்றும் அதன் பின் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டார்கள். நபியிடத்தில் இவருக்கு உயர்ந்த மதிப்பு இருந்தது. இராக்கில் ஹி.36ல் மரணித்தார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) தூய்மையான அடிப்படைக் கொள்கையை அனைத்து இணைவைப்புக்களையும் விட்டும் பாதுகாக்க இந்நபிமொழி தூண்டுகிறது.

(2) நிச்சயமாக அல்லாஹ் எந்தவொரு தேவையுமற்ற தனித்தவன் என்பதை இந்நபிமொழி விளக்குகின்றது. அவனுடைய யதார்த்தம், பெயர்கள், பண்புகள், செயல்கள், சட்டங்கள் போன்ற எந்தவொன்றிலும் அவனுக்கு நிகர் யாருமில்லை.

(3) அல்லாஹ்வின் தனித்துவத்திற்கு முரண்படும் வார்த்தைகளைப் பிரயோகிப்பதை இந்நபிமொழி எச்சரிக்கின்றது.

## அனைத்துத் தீமையிலிருந்தும் பாதுகாப்புத் தேடல்

٥ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا ، أَنَّهَا سُئِلَتْ عَمَّا كَانَ رَسُوْلُ اللهِ ﷺ يَدْعُوْ بِهِ اللهَ؛ قَالَتْ: كَانَ يَقُوْلُ: "اللَّهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ، وَمِنْ شَرِّ مَا لَمْ أَعْمَلْ".

(صحيح مسلم، رقم الحديث ٦٦ - (٢٧١٦)،).

(5) நபி (ஸல்) அவர்கள் (அதிகம்) பிரார்த்திக்கும் துஆ என்ன? என்று ஆஇஷா (ரலி) அவர்களிடம் வினவப்பட்டதும் அவர்கள் பின்வரும் துஆவை ஓதிக்காட்டினார்கள் : “அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின் ஷர்ரி மா அமில்து வமின் ஷர்ரி மா லம் அ.்.மல்”.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2716.

பொருள் : இறைவா! நான் செய்த, செய்யாத அனைத்தினுடைய தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

உம்முல் முஃமினீன் (நம்பிக்கையாளர்களின் தாய்) ஆஇஷா (ரலி) அவர்கள் (இறைத்தூதர் (ஸல்) அவர்களின் நெருங்கிய தோழரும், அருமை நண்பருமான) அபூபக்கர் (ரலி) அவர்களின் செல்வப் புதல்வியாவார். நபியவர்கள் ஹிஜ்ரதுக்கு முன் இவர்களைத் திருமணம் செய்து, (ஹிஜ்ரதுக்குப் பின்) மதீனாவில் அன்னையாருக்கு 9 வயதிருக்கும் போது உறவுகொண்டார்கள். நபியவர்கள் மரணிக்கும் போது அன்னாருக்கு வயது 18 ஆகும். மக்களில் மிகச் சிறந்த சட்டவல்லுனராகவும், அறிவாளியாகவும், அழகான கருத்துள்ளவராகவும் திகழ்ந்தார்கள், மேலும் கொடை வழங்குவதில் முன்னுதாரணம் கூறப் படக்கூடியவராகவும் இருந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) (அவர்களுடன் மிகநீண்ட காலங்கள் வாழ்ந்திருந்ததன் காரணமாக) அவர்களைத் தொட்டும் அதிக நபிமொழிகளை அறிவிப்புச் செய்தார்கள். அவர்கள் அறிவித்த நபிமொழிகளின் எண்ணிக்கை 2210 ஆகும்.

அன்னையவர்கள் ஹிஜ்ரி 57 அல்லது 58 ல் ரமழான் அல்லது ஷவ்வால் மாதம் 17ம் நாள் செவ்வாய்க்கிழமையன்று மதீனாவில் மரணித்து பகிஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்கள். அவர்களுடைய ஜனாஸாத் தொழுகையை (அவர்களுடைய வஸிய்யத்தின் பிரகாரம்) அபூ ஹுரைரா (ரலி) நடத்தினார்கள்.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) பாவங்களில் விழுவதைவிட்டும் தவிர்ந்து கொள்வது முஸ்லிமுக்கு அவசியமாகும். ஏனெனில் அதனைத் தொடர்ந்து கெடுதிகளும் தீமைகளும் சேர்ந்து கொள்ளும்.

(2) மனிதன் செய்த தவறுகளின் தீங்கைவிட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவதை இந்நபிமொழி தூண்டுகிறது. ஏனெனில் மனிதன் தனது எல்லா நிலைகளிலும் அல்லாஹ்விடம் தேவையுள்ளவனாக இருக்கின்றான்.

(3) படைப்பினங்கள் யாருமின்றி (நாம்) ஒதுங்கவேண்டியது அல்லாஹ்விடம் மாத்திரம்தான் என்பதை இந்நபிமொழி தெளிவுபடுத்துகின்றது.

**நற்குணங்களைப் பற்றிப்பிடித்தல்**

**٦ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا أُمِّ الْمُؤْمِنِيْنَ قَالَتْ: سَمِعْتُ رَسُوْلَ اللهِ ﷺ يَقُوْلُ: "إِنَّ الْمُؤْمِنَ لَيُدْرِكُ بِحُسْنِ خُلُقِهِ دَرَجَةَ الصَّائِمِ القَائِمِ".**

(سنن أبي داود، رقم الحديث ٤٧٩٨، وصححه الألباني).

(6) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு விசுவாசி தனது நற்குணத்தால் (இரவில்) நின்றுவணங்கி (பகலில்) நோன்பு வைப்பவனுடைய தரத்தை அடைந்து கொள்கின்றார்.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 4798. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப்பட்டு விட்டது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நற்குணம் என்பது ஈமானுடன் தொடர்புடையது. முஸ்லிமின் உள்ளத்தில் ஈமான் இருக்கும் அளவு அவனுடைய குணங்களும் நடத்தைகளும் இருக்கும். மாறாக அவனுடைய உள்ளத்தில் எந்தளவு ஈமான் மோசமாக உள்ளதோ அந்தளவு அவனுடைய குணங்களும் நடத்தைகளும் கெட்டுப் போகும். ஏனெனில் ஈமானுக்கும் நற்குணங்களுக்கும் இடையிலான தொடர்பு மிகவும் பலமானது.

(2) நல்ல குணங்களைப் பற்றிக்கொள்வதை இந்நபி மொழி ஆர்வமூட்டுகின்றது.

(3) நற்குணமானது ஈமான் மற்றும் நல்லமல்களுடன் சேர்த்து அல்லாஹ்வை நெருங்கும் வழிமுறைகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது.

### இஸ்லாம் சபிக்கும், தூற்றும் மார்க்கமல்ல

٧ -عَنْ أَبِي الدَّرْدَاءِ ﷺ يَقُوْلُ: قَالَ رَسُولُ اللهِ ﷺ: "لاَ يَكُوْنُ اللَّعَّانُوْنَ شُفَعَاءَ وَلاَ شُهَدَاءَ يَوْمَ الْقِيَامَةِ".

(صحيح مسلم، رقم الحديث ٨٥ - (٢٥٩٨)،).

(7) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (மக்களை) அதிகம் சபித்துக் கொண்டிருப்பவன் மறுமையில் பரிந்துரைப்போராகவோ அல்லது சாட்சியாளராகவோ இருக்கமாட்டார்.

அறிவிப்பவர் : அபுத் தர்தா.'. (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2598.

**✍ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபுத்தர்தா.'. என்ற (புனைப்பெயருள்ள) இவரின் பெயர் உவைமிர் பின் ஸைத் பின் கைஸ் அல்அன்ஸாரீ அல்கஸ்ரஜீ என்பதாகும். (இவர்) பத்ர் யுத்த தினத்தன்று இஸ்லாத்தில் இணைந்தார்.

இந்த உம்மத்தின் ஞானி என்று அறியப்பட்ட இந்நபித்தோழர் ஸிரியாவில் (அல்குர்ஆனைத் திறன்பட ஓதக்கூடிய) காரிகளின் தலைவராகவும், (ஸிரியாவில்) நீதிபதியாகவும் திகழ்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் வாழ்நாளில் அல்குர்ஆனைத் தொகுத்து, அதனை மனனமிட்டவர்களில் இவரும் ஒருவர். நபியவர்களிடமிருந்து இவர்கள் அறிவித்த 179 பொன்மொழிகள் நபிமொழிக்கிரந்தங்களில் பதியப்பட்டுள்ளன. உஸ்மான் (ரலி) அவர்கள் கொல்லப்பட 3 ஆண்டுகளுக்கு முன்னர், தனது 72 வயதில் ஹி. 31 அல்லது 32ல் இவர்கள் மரணம் எய்தார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இந்நபிமொழியின் விளக்கம் பற்றி பல கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன :

1. அவர்கள் இவ்வுலகில் சாட்சியாளர்களாக இருக்கமாட்டார்கள். எனவே அவர்களுடைய (இப்)பாவச் செயலுக்காக அவர்களிடமிருந்து சாட்சியங்கள் ஏற்கப்பட மாட்டாது.

2. அவர்கள் அல்லாஹ்வுடைய பாதையில் ஷஹீதாக்கப்படும் பாக்கியத்தை இழந்து விடுவார்கள்.

3. மறுமையில் நல்லடியார்கள், நரகத்திற்குச் செல்லவிருக்கம் தனது சகோதரர்களுக்காக

பரிந்துரைக்கும் போது இவர்களுடைய பரிந்துரை ஏற்கப்படமாட்டாது.

(2) அடுத்தவர்களை சபிப்பது பற்றி இந்நபி மொழியில் கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது. ஏனெனில் அது மதிக்கத்தக்க கண்ணியமான நற்குணங்களில் கிடையாது.

(3) இஸ்லாம் என்பது மற்றவர்களைத் தூற்றும், சபிக்கும் மார்க்கமல்லாது, இறையச்சம் நன்மையில் ஒருவருக்கொருவர் உதவி, புரியும் மார்க்கமாகும்.

## இஸ்லாம் வெட்கம், மென்மை, அழகிய நடைமுறையின் மார்க்கம்

٨ - عَنْ أَنَسٍ ﷺ قَالَ: قَالَ رَسُوْلُ اللّٰهِ ﷺ: "مَا كَانَ الفُحْشُ فِيْ شَيْءٍ إِلاَّ شَانَهُ، وَمَا كَانَ الحَيَاءُ فِيْ شَيْءٍ إِلاَّ زَانَهُ".

(جامع الترمذي، رقم الحديث ١٩٧٤، و سنن ابن ماجه، رقم الحديث ٤١٨٥، واللفظ للترمذي، قَالَ الإمام الترمذي: هذا حديث حسن غريب، وصححه الألباني).

(8) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : எதில் கீழ்த்தரமான சொல், செயற்பாடுகள் இருக்குமோ அவை அவ்விடயத்தை அசிங்கப்படுத்தி விடும். எதில் வெட்கம் இருக்குமோ அது அவ்விடயத்தை அழகுபடுத்தும்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி).

ஆதாரம் : திர்மிதீ 1974, இப்னுமாஜ.ஃ. 4185. இவ்வார்த்தை திர்மிதியிலிருந்து பெறப்பட்டது. இமாம் திர்மிதி அவர்கள் இந்நபிமொழி "ஹஸன் கரீப்" எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்கள். அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

**✍ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ ஹம்ஸா என்ற புனைப்பெயருள்ள அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபிகளாரின் பணியாளர் என்று அழைக்கப்பட்டார். ஹிஜ்ரத் நடைபெற 10 வருடங்களுக்கு முன்னர் மதீனாவில் பிறந்த இவர் சிறு வயதிலேயே இஸ்லாத்தை ஏற்றார். பின்பு நபிகளாருடன் சேர்ந்து 10 வருடங்கள் அவர்களுக்கு சேவை புரிந்து, நபியவர்கள் மரணிக்கும் வரை கூடவே இருந்தார்கள். பின்பு திமஷ்க் (ஸிரியா) நகரத்திற்குச் சென்று, அங்கிருந்து பஸரா நோக்கிச் சென்றார்கள். நபிகளாரைத் தொட்டும் 2286 ஹதீஸ்களை அறிவித்ததன் மூலம் அதிக

நபிமொழிகளை அறிவித்தவா்களில் ஒருவரானார். தனது 100வது வயதைத் தாண்டிய பின்னர் ஹிஜ்ரி 93ம் ஆண்டு பஸ்ராவில் காலமானார்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இஸ்லாம் என்பது நற்குணம், வெட்கம் ஆகிய வற்றைப் போதிக்கும் மார்க்கம். அதனால் தான் கடுமையான மற்றும் அசிங்கமான சொற்கள், செயல்கள், பண்புகளை எச்சரிக்கின்றது.

(2) வெட்கம் என்பது இஸ்லாம் மார்க்கத்தில் புகழப்படும் அழகான ஒரு பண்பாகும். எனவே அப்பண்பை முஸ்லிம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

(3) வெட்கம் முஸ்லிமை அல்லாஹ்வுக்கு வழிப் படத் தூண்டுவதுடன், அவனைப் பாவகாரியங்களில் இருந்து தடுக்கவும் செய்கின்றது.

## இரணத்தின் பின் ஓதும் துஆ

**٩ - عَنْ أَبِيْ أَيُّوبَ الأَنْصَارِيِّ ﷺ، قَالَ: كَانَ رَسُولُ اللهِ ﷺ إِذَا أَكَلَ أَوْ شَرِبَ قَالَ: "الْحَمْدُ لِلَّهِ الَّذِيْ أَطْعَمَ وَسَقَى، وَسَوَّغَهُ، وَجَعَلَ لَهُ مَخْرَجا".**

(سنن أبي داود، رقم الحديث ٣٨٥١، وصححه الألباني).

(9) நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டால் அல்லது அருந்தினால் பின்வரும் பிரார்த்தனையை ஓதுவார்கள்: "அல்ஹம்து லில்லாஹில்லாதீ அத்அம வஸகா வஸ்ஸவகஹு வஜஅல லஹு ம.்.க்ரஜா".

அறிவிப்பவர் : அபூ அய்யூப் அன்ஸாரீ (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 3851. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

பொருள் : உணவுவளித்து, நீர்புகட்டி, அவற்றை (சமிபாடடைய) இலகுபடுத்தி, அவை வெளியேறு வதற்கும் வழிவகுத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ அய்யூப் என்ற புனைப்பெயருள்ள காலித் பின் ஸைத் பின் குலைப் அல் கஸ்ரஜீ அந்நஜாரீ (ரலி) அன்ஸாரிகளைச் சேர்ந்த கண்ணியமிக்க ஒரு நபித்தோழராவார். இரண்டாம் உடன்படிக்கை, பத்ர், உஹத் மற்றும் அனைத்து யுத்தங்களிலும் கலந்து கொண்ட இவர் மிகவும் பொறுமையுள்ளவராகவும் ஜிஹாதில் ஆர்வமுள்ளவராகவும் இருந்தார்கள். நபியவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் வந்தபோது முதலில் இறங்கியது இவர்களது வீட்டில்தான். மஸ்ஜிதுந்நபவி மற்றும் அதனையடுத்து தனது வீடு ஆகியவற்றை கட்டும்வரை அங்கு தான்

தங்கினார்கள். நபியவர்களிடமிருந்து 155 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள். யஸீத் பின் முஆவியாவின் தலைமையில் நடைபெற்ற குஸ்தன்தீனியாப் போரின்போது ஹிஜ்ரி 52ல் மரணித்தார்கள். யஸீத் அவர்களுக்குத் தொழுகை நடத்தினார். குஸ்தன்தீனியா கோட்டையடிவாரத்தில் அடக்கப்பட்டார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஹலாலான நல்ல போசாக்கு(க் கிடைப்பது) அல்லாஹ்வின் அருட்கொடைகள் உள்ளது. இதற்காக அல்லாஹ்வைப் புகழ்வது முஸ்லிமின் கடமையாகும்.

(2) அல்லாஹ்வின் அருட்கொடைகளை ஏற்று, அது பற்றி சிந்திப்பது அவனை வணங்கும் நல்ல முறைகளில் ஒன்று.

(3) முஸ்லிம் தன்னைப் படைத்து உணவு அளிப்பவனான அல்லாஹ்வை அறிந்து அதற்காக அவனைப் புகழ்ந்து, நன்றிசெலுத்த வேண்டும். அவனை மறக்கலாகாது.

### அல்லாஹ்விடம் சிறந்த வார்த்தை

١٠ - عَـنْ أَبِـيْ ذَرٍّ ﷺ، أَنَّ رَسُـوْلَ اللهِ ﷺ سُـئِلَ: أَيُّ الْكَـلاَمِ أَفْضَـلُ؟ قَـالَ: "مَـا اصْـطَفَى اللهُ لِمَلاَئِكَتِـهِ أَوْ لِعِبَـادِهِ: سُـبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ".

(صحيح مسلم، رقم الحديث ٨٤ - (٢٧٣١)، ).

(10) நபி (ஸல்) அவர்களிடம் பேச்சுக்களில் எது சிறந்தது? என வினவப்பட்டபோது, வானவர்களுக்கு அல்லது அடியார்களுக்கு அல்லாஹ் தெரிவு செய்த "ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ" (அல்லாஹ்வைப் புகழ்ந்து துதிக்கிறேன்) என்ற வார்த்தையாகும் என்றார்கள்.

அறிவிப்பவர் : அபு தர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2731.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூதர் என்ற (புனைப்பெயருள்ள) பெரிய நபித் தோழரான இவரின் பெயர் ஜுன்துப் பின் ஜுனாதா அல்கிபாரீ என்பதாகும். இவர் (தனக்கென) எந்தப் பணத்தையும் பதுக்காமல் (அனைத்தையும் தருமம் செய்யும்) கொடைவள்ளலாக இருந்தார். மதீனாவில்

மார்க்கத் தீர்ப்புச் சொல்லிக் கொண்டிருந்த இவர் நபிகளாரைத் தொட்டும் அறிவித்த 281 பொன் மொழிகள் நபிமொழிக் கிரந்தங்களில் பதியப் பட்டுள்ளன. (மதீனாவில் இருந்து) ஸிரியாவுக்கும் பின் அங்கிருந்து "ரப்தா" வுக்கும் சென்று வசித்தார்கள். (இந்த ஊர் மதீனாவில் இருந்து 100 கி.மீ தொலைவில் ரியாத் திசையில் அமைந்துள்ளது.) ஹி. 31 அல்லது 32ல் அங்கேயே மரித்தார்கள். ஜனாஸாத் தொழுகையை இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் நடத்தினார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) "ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ" என்ற வார்தையின் மூலம் அல்லாஹ்வைத் துதித்து, புகழ்வதை இந்நபிமொழி உணர்த்துகின்றது.

(2) அல்லாஹ்வை நினைவுகூர்வதில் ஈடுபடுவதானது உளஅமைதிக்கும் ஆத்மதிருப்திக்குமான வழிகளில் உள்ளதாகும்.

(3) "ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ" என்ற வார்தையின் மூலம் அல்லாஹ்வை திக்ரு செய்வதை இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது.

## பித்அத்திலிருந்து எச்சரிக்கை

١١ - عَـنْ عَائِشَـةَ رَضِـيَ اللّـهُ عَنْهَـا أَنَّ رَسُـوْلَ اللّهِ ﷺ قَـالَ: "مَـنْ عَمِلَ عَمَلاً لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ".

(صحيح مسلم، رقم الحديث ١٨ - (١٧١٨)، وصحيح البخاري، رقم الحديث ٢٦٩٧ ، واللفظ لمسلم).

(11) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எங்களுடைய மார்க்கத்தில் இல்லாத ஒன்றை யார் (வணக்கமாகச்) செய்தாரோ அது தட்டப்பட்டுவிடும்.

அறிவிப்பவர் ஆஇஷா (ரலி).

ஆதாரம் : புஹாரி 2697, முஸ்லிம் 1718. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப்பட்டு விட்டது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) (இஸ்லாமிய) மார்க்கத்தில் இல்லாத ஒன்றை (வணக்கம் என்ற பெயரில்) புதிதாக உருவாக்குவது இஸ்லாத்தின் பார்வையில் வழிகேடாகும்.

(2) அல்லாஹ்வின் வேதத்தையும் அவனது தூதரின் ஸுன்னாவையும் எந்தவொரு மாற்றமும் மறுப்பும் இன்றிப் பற்றிப்பிடிப்பதை இஸ்லாம் தூண்டுகின்றது.

(3) மார்க்கத்தில் இல்லாத பித்அத்களில் ஈடுபடுவது இஸ்லாத்தின் யதார்த்தத்தை விட்டும் தூரமாகவும், அதன் வீழ்ச்சிக்கும் காரணமாக அமைகின்றது.

### நபியவர்களின் அதிக பிராா்த்தனை

١٢ - عَنْ أَنَسٍ ﷺ قَالَ: كَانَ أَكْثَرُ دُعَاءِ النَّبِيِّ ﷺ اَللَّهُمَّ! ﴿رَبَّنَآ ءَاتِنَا فِى ٱلدُّنْيَا حَسَنَةً وَفِى ٱلْأَخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ ٱلنَّارِ ﴾، (البقرة: ٢٠١).

(صحيح البخاري، رقم الحديث ٦٣٨٩، وصحيح مسلم، رقم الحديث ٢٣ - (٢٦٨٨)، واللفظ للبخاري).

(12) நபி (ஸல்) அவர்களுடைய அதிகமான பிரார்த்தனை "அல்லாஹும்ம ரப்பனா ஆதினா ஃபித் துன்யா ஹஸனதன் வஃபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபந்நார்" என்பதாகத்தான் இருந்தது.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி).

ஆதாரம் : புஹாரி 6389, முஸ்லிம் 2688. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

பொருள் : இறைவா! எங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நல்லதையே தருவாயாக! மேலும் எம்மை நரக வேதனையிலிருந்து பாதுகாப்பாயாக!.

அறிவிப்பாளர் பற்றி 8ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) உண்மையுடனும், உளத் தூய்மையுடனும், அறிவுடனும், கொள்கை, சட்டதிட்டங்கள், நற்குணங்கள் எல்லாவற்றிலும் இஸ்லாமியப் போதனைகளைப் பின்பற்றுவோருக்கு ஈருலகப் பாதுகாப்பு, வெற்றி, ஆரோக்கியம் ஆகிய வற்றுக்கான மார்க்கமாக அது அமைகின்றது.

(2) இப்பிரார்த்தனை அனைத்து நலவுகளையும் உள்ளடக்கியுள்ளது. எனவே தடுக்கப்பட்டவை மற்றும் சந்தேகத்திற்கிடமானவை ஆகியவற்றைத் தவிர்ந்து கொள்வதுடன் இப்பிரார்த்தனையை அதிகமாக ஓதவேண்டும்.

## இறைவனுக்கு விருப்பமான இடம் பள்ளிவாயிலே

١٣ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُوْلَ اللهِ ﷺ قَالَ: "أَحَبُّ الْبِلاَدِ إِلَى اللَّهِ مَسَاجِدُهَا ، وَأَبْغَضُ الْبِلاَدِ إِلَى اللَّهِ أَسْوَاقُهَا".

(صحيح مسلم، رقم الحديث ٢٨٨ -(٦٧١)، ).

(13) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : பூமியில் அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான இடம் அதிலுள்ள பள்ளிவாயில்கலாகும். மிக வெறுப்பான இடம் அப்பூமியிலுள்ள சந்தைகளாகும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 671.

### ✐ஹதீஸ் அறிவிப்பாளர்:

“ராவியதுல் இஸ்லாம்” என்ற சிறப்புப்பெயர் பெற்றவர் ஆபூ ஹுரைரா அப்துர் ரஹ்மான் பின் ஸக்ர் அத்தௌஸீ அல்யமானீ (ரலி). தான் ஆடு மேய்க்கும் போது பூனைக்குட்டியுடன் விளையாடிக் கொண்டிருப்பதை வழமையாகிக் கொண்டதால் இவருக்கு “அபூ ஹுரைரா” என்ற புனைப்பெயர் சூட்டப்பட்டது. “கைபர்” போர் நடைபெற்ற ஹிஜ்ரி 7ம் ஆண்டு இஸ்லாத்தை ஏற்றார். பின்னர் 4 வருடங்கள் நபிகளாருடனேயே இருந்தார்கள்,

நபியவர்கள் எங்கிருந்தாலும் அவர்களுடனேயே இருந்து நபிமொழிகளைக் கற்பதில் முயற்சி எடுத்து அதில் ஆர்வம் காட்டினார்கள். இதனால் நபிகளாரைத் தொட்டும் அதிக நபிமொழிகளை மனனமிட்டு, 5374 ஹதீஸ்களை அறிவித்து, நபித்தோழர்களில் மிகக் கூடுதலான நபிமொழிகளை அறிவித்தவர் என்ற பெயருக்கு சொந்தமானார். மேலும் மதீனாவின் பிரபல மார்க்க சட்டக்கலை வல்லுனர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். ஹிஜ்ரி 57ம் ஆண்டு மதீனாவில் மரித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) பள்ளிகள் என்பது அல்லாஹ்வையும் அவனது அடையாளச் சின்னங்களையும் நினைவு கூர்வதற்கான தளங்களாகும். அச்சின்னங்களில் மிக முக்கியமானது ஐவேளைத் தொழுகைகளாகும்.

(2) பள்ளிகளைப் பரிசுத்தப்படுத்துவது மற்றும் நறுமணம் கமழச்செய்வதன் மூலம் கண்ணியப் படுத்துவது அவசியமாகும். எனவே தீய வாசனைகளுடனோ அழுக்குத் துணிகளுடனோ அதனுள் நுழையலாகாது.

(3) ஊர்களில் பொதுவாக அல்லாஹ்வுக்கு வெறுப்புக்குரிய இடமாக சந்தைகள் கருதப் படுகின்றன. ஏனெனில் அவை மோசடி, பொய்ச் சத்தியங்கள், அல்லாஹ்வை நினைவுகூர்வதை

புறக்கணித்தல் போன்றவற்றுக்கான இடங்களாக உள்ளன.

### தீய நோய்களை விட்டும் பாதுகாப்புத் தேடல்

١٤ -عَـنْ أنـس ﷺ أنَّ النَّبِـيَّ ﷺ كَـانَ يَقُـوْلُ: "اللَّهُـمَّ إِنِّـي أَعُـوذُ بِكَ مِنَ الْجُنُونِ، وَالْجُذَامِ، وَالْبَرَصِ، وَ سَيِّئِ الأَسْقَامِ".

(سنن النسائي، رقم الحديث ٥٤٩٣، سنن أبي داود، رقم الحديث ١٥٥٤، واللفظ للنسائي، وصححه الألباني).

(14) நபி (ஸல்) அவர்கள் பின்வரும் துஆவை ஓதக்கூடியவராக இருந்தார்கள் : “அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் ஜுனூனி வல் ஜுதாமி வல்பரஸி வஸய்யிஇல் அஸ்காம்”.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 1554, நஸாஈ 5493. இவ்வார்த்தை நஸாஈயில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

பொருள் : இறைவா! பைத்தியம், தொழுநோய், வெண்குஷ்டம் மற்றும் தீய நோய்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

அறிவிப்பாளர் பற்றி 8ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இதுபோன்ற கொடிய நோய்களின் தாக்கம் கடுமையானது என்பதாலும், மக்களிடத்தில் வெறுப்புக்குரியதாக இருப்பதாலும், தோற்றத்தை மாற்றி அசிங்கப்படுத்துவதாலும் நபியவர்கள் இந்நோய்களை விட்டும் பாதுகாப்புத் தேடினார்கள்.

(2) ஆரோக்கியம் என்பது ஒரு மகத்தான அருட்கொடை. அதைப் பேணி, அதற்காக அல்லாஹ்வுக்கு அதிகம் நன்றி செலுத்துவது முஸ்லிமின் கடமை. ஏனெனில் இதுபோன்ற ஒரு கொடிய நோய் மனிதனுக்கு ஏற்பட்டால் அவனுக்கு தனது தேவைகள், கடமைகளை நிறைவேற்ற முடியாமல் போய்விடுகின்றது.

(3) ஆரோக்கியத்தைப் பேண சில வழிமுறைகள் உள்ளன. எதார்த்தத்தில் அவை அல்லாஹ்வின் உலக விதிமுறைகளாக இருக்கின்றன. உடலாரோக்கியத்திற்காக அல்லாஹ் விதித்த இந்த விதிமுறைகளைக் கண்ணியப்படுத்துவது ஓர் அடியான் தனது அடிமைத் தனத்தை நிரூபிப்பதன் அடயாளங்களில் உள்ளதாகும்.

## அரபா நோன்பின் சிறப்பு

١٥ - عَنْ أَبِيْ قَتَادَةَ ﷺ، أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: "صِيَامُ يَوْمِ عَرَفَةَ، إِنِّيْ أَحْتَسِبُ عَلَى اللّٰهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِيْ قَبْلَهُ وَالسَّنَةَ الَّتِيْ بَعْدَهُ".

(جامع الترمذي، رقم الحديث ٧٤٩، وصحيح مسلم، جزء من رقم الحديث ١٩٦ - (١١٦٢)، واللفظ للترمذي، وقَالَ الإمام الترمذي عن هذا الحديث: بأنه حديث حسن، وصححه الألباني ).

(15) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அரபா நோன்பானது அதற்கு முன்னுள்ள வருடம் மற்றும் பின்னுள்ள வருடம் (இரு வருடங்கள்) ஆகியவற்றில் இழைக்கப்பட்ட பாவங்களுக்கான குற்றப்பரிகாரமாக அமைய அல்லாஹ்விடத்தில் நான் எதிர்பார்க்கிறேன்.

அறிவிப்பவர் : அபூ கதாதா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 1162, திர்மிதீ 749. இவ்வார்த்தை திர்மிதீயில் இருந்து பெறப்பட்டது.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ கதாதா பின் ரிப்இய் அல் அன்ஸாரீ என்பவர் கண்ணியமிக்க நபித்தோழராவார். பல யுத்தங்களில் பங்குபற்றிய இவர் நபி (ஸல்) அவர்களுக்கு பயணத்தின்போது காவல்காப்பவராக இருந்தார்கள். பாரசீகத்தில் போர் புரிய உமர் (ரலி) அவர்கள் இவரை அனுப்பினார்கள். தனது கையாலே அவர்களின் மன்னரைக் கொன்றார்கள்.

இவருடைய மரணத் திகதி, இடங்களில் கருத்து வேறுபாடுள்ளது. ஹி. 38ல் கூபாவில் மரணித்து, அலீ (ரலி) அவர்கள் இவருக்குத் தொழுகை நடத்தினார்கள். ஹி. 54ல் மதீனாவில் மரணித்தார் என்ற கருத்தும், வேறு சில கருத்துக்களும் கூறப்பட்டுள்ளன.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஹாஜிகள் அல்லாதோர் அரபா தினத்தில் (துல்ஹஜ் மாதம் 9ம் நாள்) நோன்பு நோற்பதை இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது.

(2) இந்நபிமொழியில் கூறப்பட்டுள்ள பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன என்பதன் கருத்து சிறு பாவங்கள் மாத்திரமே. பெரும்பாவங்களைப் பொருத்தவரையில் அதற்காக உண்மையான தௌபாவை, அதன் நிபந்தனைகளுடன் செய்யும் வரை மன்னிக்கப்பட மாட்டாது.

(3) அல்லாஹ்விடத்தில் முஸ்லிமுடைய அந்தஸ்துக்கள் உயர்த்தப்பட நன்மைகள் காரணமாக அமைகின்றன.

## வெள்ளிக்கிழமை என்பதற்காக நோன்பு கிடையாது

**١٦ - عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ قَـالَ: سَـمِعْتُ النَّبِـيَّ ﷺ، يَقُـولُ: "لاَ يَصُوْمُ أَحَدُكُمْ يَوْمَ الْجُمُعَةِ، إلاَّ يَوْما قَبْلَهُ، أَوْ بَعْدَهُ".**

(صحيح البخاري، رقم الحديث ١٩٨٥، وصحيح مسلم، رقم الحديث ١٤٧ - (١١٤٤)، واللفظ للبخاري).

(16) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் வெள்ளிக்கிழமைக்கு முன்னோ அல்லது பின்னோ சேர்த்து நோற்றாலே தவிர அந்நாளைக் குறித்து நோன்பு நோற்க வேண்டாம்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 1985, முஸ்லிம் 1144. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) வெள்ளிக்கிழமை என்பதற்காக அந்நாளைக் குறித்து ஒரு முஸ்லிம் நோன்பு நோற்கலாகாது. எனினும் அவர் வழமையாக நோற்று வரும் நோன்பில் இடையில் வெள்ளிக்கிழமையும் சந்தித்தால் அப்போது நோற்கலாம்.

(2) வெள்ளிக்கிழமையென்பது பிரார்த்தனை, திக்ரு, வணக்கம், ஹலாலான சம்பாத்தியம் ஆகிய வற்றுக்கான நாளாகும். எனவே அந்நாளை (நபிகளாரிடம் இருந்து ஆதாரமில்லாத) நோன்பைக் கொண்டு குறிப்பாக்குவது சிறந்ததல்ல. இறைவன் பின்வருமாறு கூறுகிறான் :

﴿ فَإِذَا قُضِيَتِ ٱلصَّلَوٰةُ فَٱنتَشِرُواْ فِي ٱلْأَرْضِ وَٱبْتَغُواْ مِن فَضْلِ ٱللَّهِ وَٱذْكُرُواْ ٱللَّهَ كَثِيرًا لَّعَلَّكُمْ تُفْلِحُونَ ﴾ (سورة الجمعة، الآية ١٠).

பின்னர், (ஜுமுஆ) தொழுகை நிறைவேற்றப்பட்டு விட்டதும், (பள்ளியிலிருந்து வெளிப்பட்டு) பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வுடைய அருளைத் தேடிக் கொள்ளுங்கள், அன்றியும், நீங்கள் வெற்றியடையும் பொருட்டு, அல்லாஹ்வை அதிகமதிகம் தியானம் செய்யுங்கள். (அல்ஜும்ஆ : 10).

## ஏற்கப்படும் பிரார்த்தனைகள்

١٧ - عَــنْ أَبِــيْ هُرَيْــرَةَ ﷺ، قَــالَ: قَــالَ رَسُــوْلُ اللهِ ﷺ: "ثَــلاثُ دَعَــوَاتٍ مُسْــتَجَابَاتٌ لاَ شَــكَّ فِــيْهِنَّ : دَعْــوَةُ الْمَظْلُوْمِ، وَدَعْوَةُ الْمُسَافِرِ، وَدَعْوَةُ الْوَالِدِ عَلَى وَلَدِهِ ".

(جامع الترمذي، رقم الحديث ١٩٠٥، وسنن أبي داود، رقم الحديث ١٥٣٦، و سنن ابن ماجه، رقم الحديث ٣٨٦٢، واللفظ للترمذي، قَالَ الإمام الترمذي: هذا حديث حسن، وحسنه الألباني).

(17) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மூன்று பிரார்த்தனைகள் எவ்வித ஐயமுமின்றி ஏற்கப்படும்: 1. அநீதியிழைக்கப்பட்டவனின் பிரார்த்தனை. 2. பிரயாணியின் பிரார்த்தனை. 3. தந்தை தனது பிள்ளைக்கெதிராகக் கேட்கும் பிரார்த்தனை.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 1536, திர்மிதி 1905, இப்னு மாஜா∴ 3862. இவ்வார்த்தை திர்மிதீயில் இருந்து பெறப்பட்டது. இமாம் திர்மிதீ மற்றும் அஷ்ஷேஹ் அல்பானீ ஆகியோர் இந்நபிமொழி ஹஸன் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளனர்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அநீதியிழைக்கப்பட்டவன் காபிராக இருந்தாலும், அவனுடைய பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும். ஏனெனில் அநீதியிழைக்கப் பட்டவனுடன் நீதியாய் நடந்து கொள்ளவே அல்லாஹ் அவனுடைய பிரார்த்தனையை ஏற்கிறான்.

(2) பிரயாணியின் துஆவும் ஏற்கப்படும். எனவே அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வது பிரயாணிக்கு அவசியமாகும். அதுவே ஹஜ், உம்ரா போன்ற வணக்கம் சம்பந்தப்பட்ட பிரயாணமாக இருந்தால் அதன்பலம் அல்லாஹ்வின் உத்தரவின் பிரகாரம் இன்னும் அதிகரிக்கும்.

(3) தகப்பன் தனது மகனுக்காக கேட்கும் பிரார்த்தனையும் ஏற்கப்படும். ஏனெனில் அவர் அவனுடன் கொண்ட கருணையின் காரணமாக அவருடைய அடிஉள்ளத்திலிருந்து அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றார். அவ்வாறுதான் தந்தை தனது மகனுக்கெதிராகக் கேட்கும் பிரார்த்தனையும் ஏற்கப்படும். எனவே தந்தை கண்டிப்பாக அதனைத் தவிர்ந்து கொள்ள வேண்டும்.

## நபி (ஸல்) அவர்கள் விடயத்தில் அளவு கடந்து செல்லலாகாது

١٨ - عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللّٰهِ ﷺ: "لاَ تَجْعَلُـوْا بُيُـوْتَكُمْ قُبُـوْرًا ، وَلاَ تَجْعَلُـوْا قَبْـرِيْ عِيْـدًا ، وَصَـلُّوْا عَلَـيَّ؛ فَـإِنَّ صَلاَتَكُمْ تَبْلُغُنِيْ حَيْثُ كُنْتُمْ".

(سنن أبي داود، رقم الحديث ٢٠٤٢، وصححه الألباني).

(18) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களது இல்லங்களை நீங்கள் சமாதிகளாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். என்னுடைய சமாதியைக் கொண்டாடுவதற்காக எடுக்கவேண்டாம். என் மீது (அதிகம்) ஸலவாத் சொல்லுங்கள். ஏனெனில் நீங்கள் எங்கிருந்தாலும் உங்களது ஸலவாத் என்னை வந்தடையும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 2042. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஸுன்னத்தான தொழுகைகள், திக்ரு, துஆ, குர்அன் ஓதல் போன்றவற்றை வீடுகளில் செய்யாமல் அவற்றை முடக்கிவிடக்கூடாது. அவ்வாறு முடக்கிவிட்டால் அவை மண்ணறைகளின் தரத்திற்குச் சென்றுவிடும்.

(2) சிரமங்களைத் தடுக்கவோ அல்லது நபி (ஸல்) அவர்கள் விடயத்தில் அளவு கடந்து செல்லாமல் இருக்கவோ, நபியுடைய கப்ரைத் தரிசிப்பதற்காக, பெருநாள் தினங்களில் ஒன்று கூடுவதுபோன்று ஒன்றுகூடுவதை இந்நபிமொழி தடுக்கின்றது.

(3) நபி (ஸல்) அவர்களின் கப்ரையோ அல்லது ஏனையோரின் கப்ருகளையோ நாடிப் பிரயாணம் மேற்கொள்ளக் கூடாதென்பதை இந்நபிமொழி சுட்டிக்காட்டுகின்றது. ஏனெனில் அவ்வாறு செய்தால் அது நபிகளாரின் கப்ரைத் தரிசிப்பதைப் பெருநாள்த்தினமாக எடுத்ததாகிவிடும்.

(4) நபி (ஸல்) அவர்கள் மீது மகிழ்ச்சியுடனும், நேசத்துடனும், கண்ணியத்துடனும் அதிகம் ஸலவாத் சொல்வது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

### அவசியமின்றி புகைப்படம் எடுப்பதாகாது

١٩ - عَنْ عَبْدِ اللَّهِ بن مسعود ﷺ قَالَ: سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ: "إِنَّ أَشَدَّ النَّاسِ عَذَابًا عِنْدَ اللهِ يَوْمَ الْقِيَامَةِ: اَلْمُصَوِّرُوْنَ".

(صحيح البخاري، رقم الحديث ٥٩٥٠، وصحيح مسلم، رقم الحديث ٩٨ - (٢١٠٩)، واللفظ للبخاري).

(19) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்விடத்தில் மறுமையில் கடும் வேதனைக்கு உரியவர் உருவம் வரைபவர்களே.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : புஹாரி 5950, முஸ்லிம் 2109. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 3ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) உயிருள்ள ஒரு பொருளை வரைவது பொதுவாகவே இஸ்லாத்தில் வன்மையாகத் தடை செய்யப்பட்டதென்பதை இந்நபிமொழி எடுத்துக் காட்டுகின்றது.

(2) அல்லாஹ்வின் படைத்தல் ஆற்றலுக்கு ஒப்பாவதாலும், இணைவைப்பிற்கு இட்டுச் செல்லும் என்பதாலும் உருவப்படம் செய்வது, வரைவதை விட்டும் கடுமையான எச்சரிக்கையை இந்நபிமொழி உள்ளடக்கியுள்ளது.

(3) வணங்குவதற்காக சிலைகள், உருவங்கள் செய்பவனுக்குரிய எச்சரிக்கையாகவே இந்நபிமொழி வந்துள்ளதாகவும் கூறப்படுகின்றது. அதன் அடிப்படையில் இந்நபிமொழி சிலைகள் செய்பவனுக்குக் குறிப்பாக வந்ததாக மாறிவிடும். அவனே கடுமையான வேதனைக்குள்ளாவான்.

### சுவனம் செல்ல சில வழிகள்

٢٠ - عَنْ أَبِيْ أُمَامَةَ الْبَاهِلِيِّ ﷺ، يَقُوْلُ: سَمِعْتُ رَسُوْلَ اللهِ ﷺ يَخْطُبُ فِيْ حَجَّةِ الْوَدَاعِ؛ فَقَالَ: "اتَّقُوْا اللهَ رَبَّكُمْ، وَصَلُّوْا خَمْسَكُمْ، وَصُوْمُوْا شَهْرَكُمْ، وَأَدُّوْا زَكَاةَ أَمْوَالِكُمْ، وَأَطِيعُوْا ذَا أَمْرِكُمْ، تَدْخُلُوْا جَنَّةَ رَبِّكُمْ".

(جامع الترمذي، رقم الحديث ٦١٦، قَالَ الإمام الترمذي عن هذا الحديث: بأنه حسن صحيح، وصححه الألباني).

(20) நபி (ஸல்) அவர்கள் தனது இறுதி ஹஜ்ஜில் (ஹஜ்ஜதுல் வதா∴) பின்வருமாறு கூறினார்கள் : நீங்கள் உங்கள் இறைவனை அஞ்சிக் கொள்ளுங்கள். உங்களுக்கு விதியாக்கப்பட்டுள்ள ஐவேளைத் தொழுகைகளைத் தொழுது கொள்ளுங்கள். (ரமழான் மாதத்தில்) நோன்பு பிடியுங்கள். உங்களுடைய சொத்துக்களுக்கான ஸகாத்தைக் கொடுத்து விடுங்கள். உங்களுக்குப் பொறுப்பானவர்களுக்குக் கட்டுப்படுங்கள். உங்கள் இறைவனின் சுவனம் நுழைவீர்கள்.

அறிவிப்பவர் : அபூ உமாமா (ரலி).

ஆதாரம் : திர்மதீ 616. அவர்கள் இதனை ஹஸன் ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் அஷ்ஷேஹ் அல்பானீ ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளனர்.

☞ **அறிவிப்பாளர் பற்றி :**

அபூ உமாமா என்ற புனைப்பெயரால் அறியப்படும் ஸுதைய் பின் அஜ்லான் பின் வஹ்ப் அல்பாஹிலீ உலகப்பற்றில்லாச் சிறந்த நபித்தோழராவார். இறைவழியில் போரிடுவதை அதிகம் விரும்பும் இவர் எந்தவொரு போரிலிருந்தும் பின்வாங்காமல் நபியவர்களுடனேயே இருந்தார்கள். நபியவர்களின் ஏவலுக்கமைய தனது தாய்க்குப் பணிவிடை செய்வதற்காக பத்ருப்போரில் கலந்து

கொள்ளவில்லை, தவிர மற்ற எந்தப்போரிலிருந்தும் விலகியிருக்கவில்லை. அதேபோன்று கலீபாக்களின் காலத்திலும் அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டார்கள். இவர்கள் அறிவித்த 250 நபிமொழிகள் கிரந்தங்களில் பதியப்பட்டுள்ளன. ஸிரியாவில் வசித்து வந்ததுடன் அங்குள்ள ஹிம்ஸ் எனும் ஊரில் ஹி. 81ல் மரணித்தார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இறையச்சம், கடமையான தொழுகைகள், ரமழானில் நோன்பு நோற்றல், ஸகாத் கொடுத்தல் ஆகியன சுவனம் நுழைய சில வழிகளாகும்.

(2) அச்சம், நேசம், கண்ணியம் ஆகியவற்றுடன் சேர்த்து அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுவதும், அவனுக்கு மாறுசெய்வதை விட்டும் தூரமாகுவதுமே இறையச்சம் எனப்படுகின்றது.

(3) இஸ்லாமிய சமூகத்தின் ஆட்சியாளர்கள், கவர்னர்கள், தலைசிறந்த அறிஞர்கள் மற்றும் முஸ்லிம்களின் பொறுப்புக்களை ஏற்றுள்ள சகல தரப்பினருக்கும் இஸ்லாமியப் போதனைகளுக்குட் பட்டு வழிப்படுவது அவசியமாகும். ஏனெனில் (இஸ்லாமியப் போதனைகளுக்கு முரண்படும் போது) படைத்தவனுக்கு மாறுசெய்யும் விடயத்தில் படைப்பினங்களுக்குக் கட்டுப்படலாகாது (என்ற அடிப்படையில் அவர்களுக்குக் கட்டுப்படக் கூடாது).

**மானக்கேடானவை இஸ்லாத்தில் தடை**

**٢١ - عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُوْدٍ ﷺ قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ ﷺ: لَيْسَ أَحَدٌ أَحَبَّ إِلَيْهِ الْمَدْحُ مِنَ اللهِ، مِنْ أَجْلِ ذَلِكَ مَدَحَ نَفْسَهُ، وَلَيْسَ أَحَدٌ أَغْيَرَ مِنَ اللهِ، مِنْ أَجْلِ ذَلِكَ حَرَّمَ الْفَوَاحِشَ".**

(صحيح مسلم، رقم الحديث ٣٢ - (٢٧٦٠)، وصحيح البخاري، رقم الحديث ٥٢٢٠، واللفظ لمسلم).

(21) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்வை விட அதிகம் புகழை விரும்புபவன் யாருமில்லை. அதனால்தான் தன்னைத் தானே புகழ்ந்துள்ளான். மேலும் அல்லாஹ்வை விட உரோசமுள்ளவன் யாருமில்லை. அதனால்தான் (விபச்சாரம் போன்ற) மானக்கேடானவற்றைத் தடை செய்துள்ளான்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : புஹாரி 5220, முஸ்லிம் 2760. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 3ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நிச்சயமாக அல்லாஹ் அவனை அழகான முறையில் புகழ்வதையும், (அவனுக்குக்) கட்டுப்படுதல், வணக்கம், திக்ரு போன்றவற்றின் மூலம் அவனுக்கு நன்றி செலுத்துவதையும் விரும்புகின்றான். எனவே அல்லாஹ்வுக்கும் அடியானுக்குமிடையில் தொடர்பைப் பலப்படுத்த இது போன்ற காரியங்களை முஸ்லிம் அதிகரிக்க வேண்டும்.

(2) மனிதன் அல்லாஹ்வைப் புகழும்போது அல்லாஹ் அவனுக்குக் கூலி வழங்குகின்றான். அதன் மூலம் மனிதன் பயனடைகின்றான். அல்லாஹ் அகிலாத்தாரை விட்டும் தேவையற்றவன். அவனைப் புகழ்வதால் நலவோ, புகழாதிருப்பதால் தீங்கோ அவனுக்கு ஏற்படப்போவதில்லை.

(3) அல்லாஹ் கடுமையான ரோசமுள்ளவன். அவனை விட ரோசமுள்ளவன் கிடையாது. அல்லாஹ்வுடைய ரோசமென்பது : மனிதன் தனது மார்க்கம், உயிர், மானம், புத்தி ஆகியவற்றுக்கு எந்தவொரு தீங்கோ, அத்துமீறலோ, நோவினையோ ஏற்படுத்துவதை அல்லாஹ் நிச்சயமாகப் பொருந்திக் கொள்ளமாட்டான். அதனால்தான் விபச்சாரம், களவு, கொள்ளை, வட்டி, மது அருந்தல் போன்ற இன்னோரன்ன பாவங்களைத் தடைசெய்துள்ளான்.

(4) அடியார்களில் தூய்மையான எண்ணத்துடன் நல்லவர்களைப் புகழ்வதாக இருந்தால் அவர்கள் உண்மையிலே அதற்குத் தகுதியானவர்கள் என்ற அடிப்படையில் அது ஒரு நல்ல விடயமாகவும், நல்லமலாகவும் கணிக்கப்படும்.

(5) இந்தப் புகழ் தகுதியல்லாமல் போலியாகச் செய்யப்படும் புகழாக இருந்தாலோ, அல்லது புகழப்படுபவர் தனக்கு அதன் மூலம் கர்வம் வந்துவிடும் என்று பயந்தாலோ அச்சந்தர்ப்பங்களில் புகழலாகாது. ஏனெனில் அது சமூகத்தைப் பாதிப்பதுடன் எந்தவொரு தகுதியுமற்றவர்களை உயர்த்துவதாகவும் அமைந்துவிடும். "அதிகம் புகழக்கூடியவர்களைக் கண்டால் அவர்களது முகத்தில் மண்ணை வாரி இரையுங்கள்" என்ற நபிமொழி இதற்கு மிகவும் பொருந்துகின்றது. (முஸ்லிம் 3002). பரிபூரண இறையச்சம், ஆழ்ந்த அறிவின் காரணமாக தனக்குக் கர்வம் ஏற்படாது என்ற தைரியம் உள்ளவர்களைப் போலியில்லாத பட்சத்தில் முகத்தின்முன் புகழ்வதில் தப்பில்லை.

### ஒருவருக்கெதிராகத் திருமணம் பேசலாகாது

٢٢ - عَـنْ عَبْـدِ اللهِ بْـنِ عُمَـرَ رَضِـيَ اللّـهُ عَنْهُمَـا عَـنِ الـنَّبِيِّ ﷺ قَـالَ: "لاَ يَبِـعْ بَعْضُـكُمْ عَلَـى بَيْـعِ بَعْـضٍ، وَلاَ يَخْطُـبْ بَعْضُـكُمْ عَلَى خِطْبَةِ بَعْضٍ".

(صحيح مسلم، رقم الحديث ٤٩ -(١٤١٢)، )، وصحيح البخاري، رقم الحديث ٥١٤٢، واللفظ لمسلم).

(22) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் சிலர் சிலருக்கெதிராக வியாபார நடவடிக்கையில் ஈடுபட வேண்டாம். மேலும் சிலர் சிலருக்கெதிராக திருமணப் பேச்சுவார்த்தையில் ஈடுபட வேண்டாம்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : புஹாரி 5142, முஸ்லிம் 1412. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அப்துல்லாஹ் பின் உமர் பின் கத்தாப் (ரலி) சிறந்த நபித்தோழராவார். இவர் பருவமடைய முன், தன் தந்தையுடனே இஸ்லாத்தை ஏற்று அவருக்கு முன் மதீனாவிற்கு ஹிஜ்ரத் பயணம் மேற் கொண்டவர். கந்தக் யுத்தத்தைத் தொடர்ந்து நடைபெற்ற அனைத்து யுத்தங்களிலும் கலந்து

கொண்டார். எகிப்து, ஸிரியா, இராக், பஸரா, பாரசீகம் போன்ற இஸ்லாமியப் பெரும்வெற்றிகளில் இவருக்கும் பங்குண்டு. இவர் அதிக துணிச்சலுள்ளவராக இருந்ததுடன், நபித்தோழர்கள் மத்தியில் பிரபல அறிஞர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். நபிகளாரிடமிருந்து 2630 ஹதீஸ்களை அறிவித்திருக்கின்றார். வணக்கம், பேணுதலில் முன்னுதாரணம் கூறப்பட்டவர். தனது 86ம் வயதில் ஹிஜ்ரி 73ம் ஆண்டு மரணமடைந்தார்.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒருவன் தனது சகோதர முஸ்லிமுக்கெதிராக கொடுக்கல், வாங்கலில் ஈடுபடக்கூடாதென்பதை இந்நபிமொழி சுட்டிக்காட்டுகின்றது.

(2) ஒருவன் தனது சகோதர முஸ்லிமுக்கெதிராக திருமணப் பேச்சுவார்த்தயில் ஈடுபடுவது கூடாது என்பதையும் இந்நபிமொழி உள்ளடக்கியுள்ளது. அதுவும் முதலில் பேசியவருக்கு முடிவானதன் பின்.

(3) சமூகத்தில் பகைமை, சச்சரவுகளுக்கான சூழல் ஏற்படாமலிருக்க, இஸ்லாம் நற்குணங்களையும், தூய்மையான உள்ளங்களையும் பற்றிக்கொள்ளத் தூண்டுகின்றது.

## இறையச்சமுள்ளவனை அல்லாஹ் நேசிக்கிறான்

٢٣ - عَنْ سَعْدِ بْنِ أَبِيْ وَقَّاصٍ ﷺ، قَالَ: سَمِعْتُ رَسُوْلَ اللهِ ﷺ يَقُوْلُ: "إِنَّ اللهَ يُحِبُّ الْعَبْدَ التَّقِيَّ، الْغَنِيَّ، الْخَفِيَّ".

(صحيح مسلم، رقم الحديث ١١ - (٢٩٦٥)،).

(23) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் இறையச்சமுள்ள, போதுமென்ற மனப் பாங்குள்ள, (தேவையற்ற விடயங்களிலிருந்து) ஒதுங்கியிருக்கும் அடியானை விரும்புகிறான்.

அறிவிப்பவர் : ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2965.

### ✐ஹதீஸ் அறிவிப்பாளர்:

அபூ இஸ்ஹாக் என்ற புனைப்பெயர் கொண்ட ஸஃது பின் அபீ வக்காஸ் அஸ்ஸுஹ்ரீ அல்குரஷீ என்பவர் கண்ணியமிக்க ஒரு நபித்தோழராவார். ஹிஜ்ரத்திற்கு 23 ஆண்டுகளுக்கு முன் மக்காவில் பிறந்து அங்கேயே வளர்ந்த இவர், ஆரம்பத்திலேயே இஸ்லாத்தில் நுழைந்து முந்திக் கொண்டோர்களுக்குரிய சிறப்பைப் பெற்றுக் கொண்டார்கள். மேலும் சுவனத்தைக் கொண்டு நற்செய்தி சொல்லப்பட்ட 10 பேரில் ஒருவராகவும், உமர் (ரலி) அவர்களுக்குப் பின் கலீபாவாகத்

தெரிவு செய்யப்பட அவர்களாலேயே நியமிக்கப் பட்ட அறுவர் கொண்ட தெரிவுக் குழுவில் ஒருவராகவும் இருந்தார்கள். பின்பு மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்று பத்ருப்போர் மற்றும் அதன் பின் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டார்கள்.

நபியவர்களின் தாயார் ஆமினாவின் சிற்றப்பாவின் பிள்ளைகளில் இவரும் ஒருவர். அதனால்தான் நபியவர்கள் இவரை எனது மாமா என அழைப்பவராக இருந்தார்கள். அதன் அர்த்தம் நபியவர்களின் மாமன்மார்களில் இவரும் ஒருவர் என்பதே தவிர, நபியவர்களின் தாயாருடைய நேரடிச் சகோதரர் என்ற அர்த்தம் கிடையாது.

இவர் துணிவான குதிரைவீரராகவும், நபியவர்களால் அனுப்பப்படும் சிறுபடைகளின் தளபதிகளில் ஒருவராகவும் திகழ்ந்தார்கள். அபூபக்ர்(ரலி), மற்றும் உமர்(ரலி) அவர்களின் ஆட்சிக்காலங்களில் பேசும் படியான பல (யுத்த) நிலைப்பாடுகள் இவருக்கு இருந்தன. உமர்(ரலி) மற்றும் உஸ்மான்(ரலி) ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் கூபாவிற்கு கவர்னராக நியமிக்கப்பட்டார்கள்.

பாரசீகம் மற்றும் இராக் பகுதியில் நடைபெற்ற யுத்தங்களில் முஸ்லிம் படைகளைத் தளபதியாக நின்று வழிநடத்திச் சென்றார்கள். அல்லாஹ்வின் அருளால் காதிஸிய்யாப் போரில் பாரசீகர்களைப் படுதோல்வியடையச் செய்தார்கள். மதாஇன்

பகுதியையும் இவர்கள்தான் வெற்றிகொண்டார்கள். இவருக்கு இன்னும் பல சிறப்புக்கள் உள்ளன. விரிவஞ்சி விட்டோம்.

பின்பு ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் அரசியல், பதவிகள் அனைத்தையும் துறந்ததுடன், நபித்தோழர்களுக்கு மத்தியில் ஏற்பட்ட அரசியல் பிரச்சினைகளில் இருந்து ஒதுங்கி இருந்தார்கள். தனது பிள்ளைகளிடமும் இதுபற்றி எத்தகவலும் தன்னிடம் கொண்டு வரவேண்டாமென்று கூறி விட்டார்கள்.

நபியவர்களைத் தொட்டும் 270 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள். இவர் சற்று குண்டானவராக இருந்தார்கள். மதீனாவிலிருந்து 7 மைல்கள் தொலைவிலுள்ள அகீக் என்ற இடத்தில் தனது வீட்டில் ஹி.55ல் மரணித்தார்கள். அங்கிருந்து மதீனாவிற்குக் கொண்டுவரப்பட்டு பகீஃஇல் அடக்கம் செய்யப்பட்டார்கள். அப்போது மதீனாவிற்கு கவர்ணராக இருந்த மர்வான் பின் ஹகம் இவருடைய ஜனாஸாத் தொழுகையை நடத்தினார்கள். முஹாஜிரீன்களில் இறுதியாக மரணித்தவர் இந்த ஸஃத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்கள் தான்.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) சமூகவாழ்கை என்பது மனிதனுக்கு இன்றியமையாத ஒன்று. எனவே சமூகத்துடன் சேர்ந்திருப்பது அவனுக்கு அவசியம்.

(2) இந்த சமூகவாழ்கையில் கலந்திருந்திருந்தால் தனது மார்க்கத்திற்கு ஏதாவது பிரச்சினை வருமென்றோ, தடுக்கப்பட்டவை அல்லது சந்தேகத்திடமானவற்றில் விழுந்து விடுவோமென்றோ அஞ்சினால் அப்படிப்பட்டவர்கள் ஒதுங்கி வாழ்வதே சிறந்தது.

(3) குடும்பநலன் பேணல் இஸ்லாத்தின் அடிப்படைகளில் ஒன்று. எனினும் இது பாவங்களின்பால் இட்டுச் சென்றால், "நலவுகளை வரவழைப்பதை விட கெடுதிகளைத் தடுப்பது முதன்மையானது" என்ற பொதுவிதியின் பிரகாரம் உறவுகளை விட்டும் ஒதுங்குவது சிறந்தது.

(4) இந்நபிமொழியின் கருத்தென்னவெனில்: அல்லாஹ் இறையச்சமுள்ளவனை விரும்புகின்றான். தன்மீது கடமையானதைச் செய்தும், தடுக்கப்பட்டதைத் தவிர்ந்தும் நடப்பவனே இறையச்சமுள்ளவன். உள்ளதைக் கொண்டு ஆத்ம திருப்தியடைபவனே இந்நபிமொழியில் கூறப்பட்ட கனீ என்ற சொல்லின் விளக்கம். அவனே அல்லாஹ்விடம் மிக நேசத்திற்குரியவன். அல்லாஹ் அல்லாதோரிடத்தில் தேவையற்றிருப்பவன்.

இந்நபிமொழியில் இடம்பெற்றுள்ள க.்.பீய் என்பதன் விளக்கம் என்னவெனில்: அவன் மறைந்தால் தேடப்படமாட்டான், இருந்தாலும் அறியப்பட மாட்டான். (அடுத்தவர்கள் விடயத்தில் தலையிடாமல் அமைதியாக ஒதுங்கி இருப்பவன். அவன் இருப்பதும் மறைவதும் சமன்.) இப்படிப்பட்ட பண்புள்ளவர்கள் மகத்தானவர்களாகவும், சுவனத்தின் உயர்பதவியிலும் இருப்பார்கள்.

### ஸூரதுல் முல்கின் சிறப்பு

٢٤ - **عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ، عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "إِنَّ سُوْرَةً فِي الْقُرْآنِ ثَلاَثُوْنَ آيَةً، شَفَعَتْ لِصَاحِبِهَا؛ حَتَّى غُفِرَ لَهُ، ﴿تَبَٰرَكَ ٱلَّذِي بِيَدِهِ ٱلۡمُلۡكُ﴾ ".** (سورة الملك: ١).

(سنن ابن ماجه، رقم الحديث ٣٧٨٦، و سنن أبي داود، رقم الحديث ١٤٠٠، وجامع الترمذي، رقم الحديث ٢٨٩١، واللفظ لابن ماجه، قَالَ الإمام الترمذي عن هذا الحديث: بأنه حديث حسن، وصححه الألباني).

(24) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்குர்ஆனில் 30 வசனங்களைக் கொண்ட ஓர் அத்தியாயமுண்டு. அது தன்னை ஓதிவரக் கூடியோருக்கு (மறுமையில்) அவருடைய பாவங்கள் மன்னிக்கப்படும் வரை (அல்லாஹ்விடத்தில்) பரிந்துரைத்துக் கொண்டிருக்கும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 1400, திர்மிதி 2891, இப்னு மாஜா.ஃ. 3786. இவ்வார்த்தை இப்னுமாஜா.ஃ.வில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இந்நபிமொழி ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஸூரதுல் முல்கின் சில சிறப்புக்களை இந்நபிமொழி எடுத்துக்காட்டுகின்றது.

(2) இவ்வத்தியாயத்தை ஓதி அதன் பிரகாரம் செயற்படுவோருக்கே அது பரிந்துரைக்கும். எனவே அல்லாஹ் ரஸூலுக்கு, நேசத்துடனும் உளத் தூய்மையுடனும் கட்டுப்படவேண்டும்.

(3) பரகத் பொருந்திய இவ்வத்தியாயத்தை கற்று, விளங்கி, அமுல்படுத்துவதன் மூலம் கரிசனை எடுப்பதை இந்நபிமொழி தூண்டுகின்றது.

(4) நபிகளாரின் மீது மகிழ்ச்சியுடனும், நேசத்துடனும், கண்ணியத்துடனும் அதிகம் ஸலவாத் சொல்வது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

## தொழுகையில் கரிசணையெடுத்தல்

٢٥ - **عَنْ بُرَيْدَةَ بْنِ الحُصَيْبِ الْأَسْلَمِيِّ ﷺ، قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ ﷺ: "اَلْعَهْدُ الَّذِي بَيْنَنَا وَبَيْنَهُمْ: اَلصَّلاَةُ؛ فَمَنْ تَرَكَهَا؛ فَقَدْ كَفَرَ".**

(جامع الترمذي، رقم الحديث ٢٦٢١، وسنن ابن ماجه، رقم الحديث ١٠٧٩، قال الإمام الترمذي عن هذا الحديث: بأنه حسن صحيح غريب، وصححه الألباني).

(25) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (விசுவாசிகளான) எங்களுக்கும் (நிராகரிப்பாளர்களான) அவர்களுக்குமிடையில் உள்ள வேறுபாடு தொழுகையே. யார் அதனை விட்டு விடுகின்றாரோ அவர் நிராகரித்து விட்டார்.

அறிவிப்பவர் : புரைதா பின் ஹுஸைப் (ரலி).

ஆதாரம் : திர்மிதி 2621, இப்னு மாஜா∴ 1079. இமாம் திர்மிதீ இதனை ஹஸன் ஸஹீஹ் கரீப் எனும் தரத்திலுள்ளதாகவும், அஷ்ஷேஹ் அல்பானீ ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளனர்.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

புரைதா பின் ஹுஸைப் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செல்லும் வழியில் இவர்களைத் தாண்டிச் சென்றவேளை இஸ்லாத்தில் நுழைந்தார்கள். இவருடைய ஊர்வாசிகள் சுமார் 80பேர் இவருடன் சேர்ந்தே இஸ்லாத்தில் நுழைந்தார்கள். அவர்களை வைத்து நபியவர்கள் இஷாத் தொழுகையை நடத்தினார்கள். இவர் 177 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள்.

புரைதா (ரலி) தனது ஊரிலேயே தங்கியிருந்து, உஹது யுத்தத்திற்குப் பின் நபியவர்களுடன் வந்து சேர்ந்து அதற்குப் பின் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டார்கள். பின்பு பஸராவுக்குப் போய் அங்கு தனக்கொரு வீடு கட்டிக் கொண்டார்கள். பின் அங்கிருந்து குராஸான் (தற்போதைய ஆப்கானிஸ்தான்) பகுதிக்கு போரில் கலந்து கொள்ளச் சென்றார்கள். மரணிக்கும் வரை “மர்வ்” என்ற ஊரில் தங்கி அங்கேயே அடக்கப் பட்டார்கள். யஸீத் பின் முஆவியாவின் ஆட்சிக் காலத்தில் ஹிஜ்ரி 62 / 63ல் மரணித்தார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) முஸ்லிமுக்கும் முஸ்லிமல்லாதோருக்கும் இடையிலுள்ள வெளிப்படையான வித்தியாசம் தொழுகைதான் என்று இஸ்லாம் முடிவெடுக்கின்றது.

(2) எச்சந்தர்ப்பத்திலும் தொழுகை விடயத்தில் பராமுகமாக இருப்பது ஹராம் என்பதை இந்நபிமொழி வலியுறுத்துகின்றது.

(3) தொழுகை என்பது இஸ்லாத்தின் உயிர் நாடியாகும். அதனை விட்டால் (அவனிடத்தில்) வெளிரங்கமாக உணரக்கூடிய இஸ்லாத்தின் எவ்வித அடையாளமுமில்லை.

**இஸ்லாம் சகிப்புத்தன்மையுள்ள மார்க்கமாகும்**

٢٦ - **عَنْ مُعَاذٍ ﷺ قَالَ: خَرَجْنَا مَعَ رَسُوْلِ اللهِ ﷺ فِيْ غَزْوَةِ تَبُوْكَ؛ فَكَانَ يُصَلِّي الظُّهْرَ وَالْعَصْرَ جَمِيْعًا ، وَالْمَغْرِبَ وَالْعِشَاءَ جَمِيْعًا.**

(صحيح مسلم، رقم الحديث ٥٢ - (٧٠٦)،).

(26) நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தபூக் யுத்தத்திற்குச் சென்றோம். (அச்சந்தர்ப்பத்தில்) நபியவர்கள் ளுஹரை அஸருடனும், மஃரிபை இஷாவுடனும் சேர்த்துத்தொழுபவராக இருந்தார்கள்.

அறிவிப்பவர் : முஆத் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 706.

**✎ஹதீஸ் அறிவிப்பாளர்:**

முஆஸ் பின் ஜபல் பின் அம்ரு பின் ஔஸ் அபூ அப்திர்ரஹ்மான் அல்அன்ஸாரீ அல்கஸ்ரஜீ கண்ணியமான ஒரு நபித்தோழராவார். அகபா உடன்படிக்கை, பத்ருப் போர் உட்பட அனைத்துப் போர்களிலும் கலந்து கொண்டார்கள். தனது 18வது வயதில் இஸ்லாத்தில் நுழைந்தார்கள்.

நபித்தோழர்களில் ஹராம் ஹலால் விடயத்தில் சிறந்த அறிவாளியாக இருந்த இவர்கள் 157 நபிமொழிகள் அறிவித்துள்ளார்கள். நபியவர்கள் இவரை யமன் தேசத்திற்கு கவர்னராக அனுப்பினார்கள். நபியின் மரணத்தின் பின் அங்கிருந்து வந்து ஷாம் (தற்போதைய ஸிரியா) நோக்கிச் சென்றார்கள். அங்கு கொள்ளை நோயால் பீடிக்கப்பட்டு ஹிஜ்ரி 17 / 18ல் தனது 34வது வயதில் மரணமானார்கள்.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ளுஹரையும் அஸரையும், ம.்.ரிபையும் இஷாவையும் முற்படுத்தியோ அல்லது பிற்படுத்தியோ (பிரயாணத்திலோ அல்லது போரிலோ) தொழலாம் என்பதை இந்நபிமொழி வலியுறுத்துகின்றது.

(2) இஸ்லாம் இலகுவான, சகிப்புத் தன்மையுள்ள மார்க்கமாகும். அது சிரமம் கஷ்டங்களை நீக்கி விட்டது. இதனால்தான் சமூகத்திற்கு இலகுபடுத்தும் பொருட்டு இரு நேரத்தொழுகைகளை சேர்த்துத் தொழும் சட்டம் அறிமுகமாகியது.

(3) "நிச்சயமாக குறிப்பிட்ட நேரங்களில் தொழுகையை நிறைவேற்றுவது மு.்.மின்களுக்கு விதியாக்கப் பெற்றுள்ளது" என்ற வசனம் இந்நபிமொழியுடன் முரண்படமாட்டாது. ஏனெனில் இந்நபிமொழி வழமையாக்கிக் கொள்ளாமல் விதிவிலக்காக பிரயாணம் போன்ற தேவைகளுக்குக் குறிப்பாகக் கூறப்பட்டது.

## அல்லாஹ்வின் பொருத்தமே மனிதனின் இறுதிக் குறிக்கோல்

٢٧ - عَـنْ عَائِشَـةَ رَضِـيَ اللّـهُ عَنْهَـا ، قَالَـتْ: سَـمِعْتُ رَسُـوْلَ اللّـهِ ﷺ يَقُـوْلُ: "مَـنِ الْتَمَسَ رِضَـا اللّـهِ بِسَـخَطِ النَّـاسِ كَفَـاهُ اللّـهُ مُؤْنَـةَ النَّـاسِ، وَمَـنِ الْتَمَسَ رِضَـا النَّـاسِ بِسَـخَطِ اللّـهِ؛ وَكَلَـهُ اللّـهُ إِلَـى النَّاسِ".

(جامع الترمذي، رقم الحديث ٢٤١٤، سكت الإمام الترمذي هنا ولم يقل عن هذا الحديث شيئا، وصححه الألباني).

(27) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் மக்களைப் பகைத்தும் சரி இறைதிருப்தியைத் தேடினால் அம்மக்களின் பகையை விட்டும் அல்லாஹ் அவனைப் பாதுகாப்பான். மேலும் யார் இறைவனைப் பகைத்தும் சரி மக்கள் திருப்தியைத் தேடினால் அல்லாஹ் அவர்களை அம்மக்களிடமே சாட்டிவிடுகின்றான்.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : திர்மிதீ 2414. அஷ்ஷேஹ் அல்பானீ ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அடியார்களுக்கு வழிப்படுவதைவிட அவர்களின் ரப்புக்கு வழிப்படுவதை முதன்மைப் படுத்த வேண்டும்.

(2) அல்லாஹ்வை நெருங்க அவனை வழிப்படுவது மற்றும் பரிபூரண அடிமைத்தனத்தை நிரூபிப்பதைத் தவிர வேறு வழியொன்றும் கிடையாது. சரியான முறையில் அவனை வழிப்படுவது மற்றும் பரிபூரண அடிமைத்தனத்தை நிரூபிப்பதைத் தவிர அவனுடைய பொருத்தத்தைப் பெற வேறு வழி கிடையாது.

(3) அழிந்து போகும் இவ்வுலகின் அற்ப சுகத்திற்காக தனது மார்க்கத்தை விற்று, அல்லாஹ்வுக்கு அஞ்சாது, மக்களுக்கு அஞ்சி பாவங்களில் அவர்களுக்கு வழிப்பட்டால் அல்லாஹ் அவனை இழிவாக்கி, குறைகளை அம்பலப்படுத்தி அவனுடைய அனைத்து கருமங்களையும் தலைகீழாக மாற்றிவிடுவான்.

## இஸ்லாம் அழகிய நடைமுறை

٢٨ - **عَـنْ أَبِـيْ ذر ﷺ قَـالَ: قَـالَ لِـيْ رَسُـوْلُ اللهِ ﷺ: "اتَّـقِ اللهَ حَيْثُمَـا كُنْـتَ، وَأَتْبِـعِ السَّـيِّئَةَ الحَسَـنَةَ؛ تَمْحُهَـا، وَخَـالِقِ النَّـاسَ بِخُلُقٍ حَسَنٍ".**

(جامع الترمذي، رقم الحديث ١٩٨٧، قال الإمام الترمذي عن هذا الحديث بأنه: حسن صحيح، وحسنه الألباني).

(28) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீ எங்கிருந்தலும் அல்லாஹ்வை அஞ்சிக்கொள். ஒரு தீமையைத் தொடர்ந்து அதனை அழிக்கும் நன்மையைச் செய்துகொள். மக்களுடன் நற்குணத்தோடு பழகு.

அறிவிப்பவர் : அபூ தர் (ரலி).

ஆதாரம் : திர்மிதி 1987, அவர்கள் இதனை ஹஸன் ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும், அஷ்ஷேஹ் அல்பானீ ஹஸன் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளனர்.

அறிவிப்பாளர் பற்றி 10ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) தக்வா என்பது : இஸ்லாமியப் போதனைகளுக்கமைய அல்லாஹ்வின் ஏவலுக்குக் கட்டுப்பட்டு, விலக்கல்களைத் தவிர்ப்பதன் மூலம் அவனுடைய வேதனை, தண்டனையை விட்டும் ஆத்மாவைப் பாதுகாத்தலாகும்.

(2) நற்குணம் என்பது : மார்க்க அடிப்படையில் அல்லது அறிவு ரீதியாக அழகாகக் கருதப்படுவதே நற்குணமாகும். நோவினையைத் தடுத்தல், நலவுகள் செய்தல், நோவினைகள் ஏற்படும் போது பொறுமை காத்தல்.

(3) நன்மைகள் செய்யும் போது தீமைகள் கரைந்து விடும். இது அல்லாஹ் மக்களுக்கு செய்த அருள்களிலுள்ளது.

(4) இஸ்லாம் அழைப்புபணி, கல்வி, குடும்பம், சமூகம், பொருளாதாரம், அரசியல் அனைத்திலும் மக்களுடன் அழகிய முறையில் பழகுமாறு மக்களை அழைக்கின்றது.

## ருகூ.:., ஸுஜூதில் ஓதும் துஆ

٢٩ - عَـنْ عَائِشَـةَ رَضِـيَ اللّـهُ عَنْهَـا قَالَـتْ: كَـانَ النَّبِـيُّ ﷺ يَقُـوْلُ فِـيْ رُكُوْعِـهِ وَسُـجُوْدِهِ: "سُـبْحَانَكَ اَللّٰهُـمَّ رَبَّنَـا وَبِحَمْـدِكَ، اَللّٰهُـمَّ اغْفِرْ لِيْ".

(صحيح البخاري، رقم الحديث ٧٩٤، وصحيح مسلم، رقم الحديث ٢١٧ - (٤٨٤)، واللفظ للبخاري).

(29) நபி (ஸல்) அவர்கள் தனது ருகூ.:.விலும் ஸஜூதிலும் "ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக, அல்லாஹும்ம.:.பிர்லீ" எனக் கூறக் கூடியவராக இருந்தார்கள்.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : புஹாரி 794, முஸ்லிம் 484. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) திக்ரையும் பிரார்த்தனையையும் பொதிந்துள்ள "ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக, அல்லாஹும்ம.்.பிர்லீ" என்பதனை ருகூ.விலும் ஸுஜூதிலும் ஓத வேண்டும்

(2) ருகூ.விலும் ஸுஜூதிலும் தஸ்பீஹ் செய்வதும் பிரார்த்திப்பதும் நபியவர்களின் செயல்ரீதியாக உறுதியான ஸுன்னாவாகும்.

(3) நபியவர்களின் செயல்ரீதியாக உறுதியான ருகூ.்.விலும் ஸுஜூதிலும் ஓத வேண்டிய இன்னும் பல தஸ்பீஹ், திக்ரு மற்றும் பிரார்த்தனைகள் உள்ளன. எனினும் விரிவஞ்சி விட்டோம்.

**பள்ளிவாயிலின் சிறப்பு**

٣٠ - عَنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ، عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "مَنْ غَدَا إِلَى الْمَسْجِدِ وَرَاحَ، أَعَدَّ اللهُ لَهُ نُزُلَهُ مِنَ الْجَنَّةِ، كُلَّمَا غَدَا أَوْ رَاحَ".

(صحيح البخاري، رقم الحديث ٦٦٢، وصحيح مسلم، رقم الحديث ٢٨٥ - (٦٦٩)، واللفظ للبخاري).

(30) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் பள்ளிவாயிலுக்குச் சென்று, திரும்புகிறாரோ அவர் போய்த் திரும்பும் ஒவ்வோர் சந்தர்ப்பத்திற்கும் அல்லாஹ் சுவனத்தில் அவருக்குரிய விருந்து உபசாரத்தைத் தயார் படுத்துகின்றான்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 662, முஸ்லிம் 669. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அல்லாஹ்விடத்தில் பள்ளிவாயிலுக்கு இருக்கும் மகத்துவத்தையும், அதில் அவனை வணங்கி, தியானித்து, நன்றி செலுத்துவதன் மூலம் உயிர்பிக்க வருபவரின் சிறப்பையும் இந்நபிமொழி தொளிவு படுத்துகின்றது.

(2) சுவனம் ஏற்கனவே படைக்கப்பட்டு, இன்றுவரை இருப்பதையும், அது அழியமாட்டாது என்பதையும் விசுவாசிப்பது கடமையாகும். அல்லாஹ் அவனது நேசர்களுக்கு அவர்கள் கட்டுப்படும் விதங்களுக்கு ஏற்ப பல இன்பங்களைத் தயார்படுத்தியுள்ளான்.

(3) அல்லாஹ்வுக்கு வழிப்படுவதன் மூலம் பள்ளிகளை நிர்வகிப்பதை இந்நபிமொழி தூண்டுகின்றது. எனவே பள்ளியை கண்ணியப் படுத்தி, அழகான ஆடைகளுடன், நல்லகோலத்தில் நறுமணம் கவழ அதனுள் நுழைய வேண்டும். அழுக்கான ஆடைகள் மற்றும் துர்நாற்றங்களுடனோ நுழையக் கூடாது. மேலும் அதில் வீண் விளையாட்டுக்களில் ஈடுபடவும் கூடாது.

(4) “அல்கத்வத்” மற்றும் “அர்ரௌஹத்” ஆகிய சொற்களின் மூலம் நாடப்படுவது என்னவெனில் பள்ளிக்குப் போவதும் அங்கிருந்து திரும்புவதுமாகும்.

## கொடுக்கல் வாங்கலில் இலகுபடுத்தலின் சிறப்பு

**٣١ - عَـنْ أَبِـي هُرَيْـرَةَ ﷺ قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللّـهِ ﷺ: "مَـنْ أَقَـالَ مُسْلِمًا؛ أَقَالَهُ اللّٰهُ عَثْرَتَهُ يَوْمَ الْقِيَامَةِ".**

(سنن ابن ماجه، رقم الحديث ٢١٩٩، وسنن أبي داود، رقم الحديث ٣٤٦٠، واللفظ لابن ماجه، وصححه الألباني).

(31) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் ஒரு முஸ்லிமுடன் செய்து கொண்ட வியாபார ஒப்பந்தத்தை (இருவரில் ஒருவரின் தேவை கருதி) ரத்துச்செய்து விடுகிறாரோ அதற்காக அல்லாஹ் மறுமையில் அ(வ்வாறு ரத்துச் செய்த)வரின் தண்டனையை ரத்துச் செய்து விடுகின்றான்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : அபூ தாவூத் 3460, இப்னு மாஜா.ஃ. 2199. இவ்வார்த்தை இப்னுமாஜா.ஃ.வில் இருந்து பெறப் பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இந்நபிமொழி ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மார்க்க சட்டக்கலை அறிஞர்களிடத்தில் “இகாலா”: விற்பனையாளர், வாடிக்கையாளர் இருவரும் செய்து கொண்ட வியாபாரத்தை இருவரின் விருப்பத்துடனும் இரத்துச் செய்து கொள்ளுவதாகும்.

(2) இவ்வாறு வியாபாரத்தை (விருப்பத்துடன்) இரத்துச் செய்வதானது மக்களுக்குச் செய்யும் உபகாரம், இரக்கம், இலகுபடுத்தலிலுள்ளதுடன், அவர்களுக்கு உதவுவதுமாகும். அவர்களுடைய

கஷ்டங்களை நீக்குவது மார்க்கத்தில் முஸ்லிமிடம் வேண்டப்படும் அம்சங்களிலுள்ளது.

(3) இகாலா என்ற இரத்துச்செய்வதற்கான ஓர் உதாரணம் : ஒருவன் ஒரு பொருளை வாங்கி , பின்னர் அதிலுள்ள குறையின் காரணமாகவோ, தேவை நீங்கிவிட்டதாலோ, பெறுமதியற்றதாகவோ இருந்து, வாங்கியவர் அதனைத்திருப்பி விடுகின்றார். அதனை விற்றவரும் திரும்பப் பெறுகின்றார்.

(4) இது விற்பனையாளரிடமிருந்து வாடிக்கையாளர் பெறும் ஓர் உபகாரகமாகவே கருதப்படுகின்றது. காரணம், வியாபாரம் முறைப்படி நடந்து முடிந்து விட்டது. எனவே அதன் பின்னர் அவ்வியாபாரத்தை விற்பனையாளரிடம் அனுமதியில்லாமல் இரத்துச் செய்ய முடியாது.

## நிறுவையில் தாராளத்தன்மை

٣٢ - عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ ﷺ: "إِذَا وَزَنْتُمْ فَأَرْجِحُوْا".

(سنن ابن ماجه، رقم الحديث ٢٢٢٢ ، وصححه الألباني).

(32) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் நிறுத்தால் அதில் அதிகப்படுத்திக் கொடுங்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி).

ஆதாரம் :இப்னு மாஜா∴ 2222. அஷ்ஷெஹ் அல்பானீ இந்நபிமொழி ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

**☞அறிவிப்பாளர் பற்றி :**

ஜாபிர் பின் அப்தில்லாஹ் அல் அன்ஸாரீ (ரலி) அவர்கள் பிரபலமான நபித்தோழராவார். நபி (ஸல்) அவர்களுக்கும் மதீனா வாசிகளுக்குமிடையில் நடைபெற்ற உடன்படிக்கையில் தனது தந்தையுடன் சேர்ந்து நபியவர்களுக்கு உறுதிப்பிரமாணம் செய்தார்கள். (ஹுதைபியாவில்) மரணத்திற்காக நபியவர்களிடம் உறுதிமொழியளித்தவர்களில் இவரும் ஒருவர். இவர் அதிகமான நபிமொழிகளை அறிவித்தவர்களில் அடங்குவதுடன், அவர் அறிவித்த நபிமொழிகளின் எண்ணிக்கை 1540க உள்ளது. ஹிஜ்ரி 73ல் மரணித்தார்கள். (இவரது மரண ஆண்டில் வேறு கருத்துக்களும் உள்ளன.)

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அல்லாஹ்வுடன் தொடர்புடையவன் எப்போதும் நீதம், ஒழுங்கு ஆகிய இரு பண்புகளையும் பெற்றிருக்க வேண்டும். நீதம் என்பது உளவியல் பண்பு. ஒழுங்கு என்பது அறிவு சம்பந்தப்பட்ட பண்பு. அளவை நிறுவையில் மோசடியைத் தவிர்ந்து கொள்ள வேண்டும். மோசடி என்பது தனக்கென அளந்து அல்லது நிறுத்து எடுக்கும் போது பரிபூரணமாக எடுப்பதும், அடுத்தவர்களுக்குக் கொடுக்கும் போது குறைத்துக் கொடுப்பதுமே மோசடியாகும்.

(2) தாராளமனங் கொண்டவனாக இருப்பது முஸ்லிமுக்கு அவசியமாகும். நன்நடத்தையாலும், நல்ல சிந்தனைகளாலும் மக்களுக்கு உபகாரம் செய்யவேண்டும். மக்களுக்கு அவர்களுடைய உரிமைகளை பரிபூணமாகவும் தாராளமாகவும் கொடுக்க வேண்டும்.

(3) மோசடிக்காரன் தன்னுடன் கொடுக்கல் வாங்கலில் ஈடுபடுபவனுக்கு நஷ்டத்தையே ஏற்படுத்துகின்றான். வாங்கினால் அதிகரிக்கிறான். விற்றால் குறைக்கிறான். எனினும் உண்மையான முஸ்லிம் வியாபாரம், கொடுக்கல் வாங்கலில் உண்மையாகவும் நம்பிக்கையுடனும் நடந்து கொள்வான். யாரையும் ஏமாற்றாவோ சதிசெய்யவோ மாட்டான்.

### முஸ்லிம்கள் கட்டிடத்தைப் போன்றவர்கள்

٣٣ - عَـنْ أَبِـيْ مُوْسَـى ﷺ قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللّٰهِ ﷺ: "اَلْمُـؤْمِنُ لِلْمُؤْمِنِ كَالْبُنْيَانِ يَشُدُّ بَعْضُهُ بَعْضاً".

(صحيح البخاري، رقم الحديث ٢٤٤٦، وصحيح مسلم، رقم الحديث ٦٥ - (٢٥٨٥)، واللفظ لمسلم).

(33) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு விசுவாசி மற்ற விசுவாசிக்குக் கட்டிடத்தைப் போன்றவனாவான். அதில் சிலதை சிலது பலப்படுத்துகின்றது.

அறிவிப்பவர் : அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி).

ஆதாரம் : புஹாரி 2446, முஸ்லிம் 2585. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

### ✎ஹதீஸ் அறிவிப்பாளர்:

அவர் பெயர் அப்துல்லாஹ் பின் கைஸ் அல் அஷ்அரீ, யமன் தேசத்தைச் சேர்ந்த இவர் ஆரம்பத்தில் மக்காவிற்கு வந்து இஸ்லாத்தை ஏற்று யமனுக்கு திரும்பிவிட்டார். பின்பு எத்யோப்பியா சென்று, கைபர் வெற்றியின் பின்னர் மதீனாவிற்கு வந்து சேர்ந்தார். அங்கு அறப்போரில் கலந்து கொண்டார்கள். நபித்தோழர்களில் மிக

அழகான குரலில் அல்குர்ஆனை ஓதக்கூடிய இவர் அதிக வணக்க வழிபாடுகளில் ஈடுபடுபவராகவும், உலகப்பற்றற்ற கல்விமானாகவும் இருந்தார். ஹிஜ்ரி 44ல் மதீனா அல்லது கூபாவில் மரணத்தை எய்தினார்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) முஸ்லிம்கள் தமக்கு மத்தியில் இரக்க சிந்தையுள்ளவர்களாக, நேசங் கொண்டோராக, பக்கபலமானோராக இருக்க வேண்டும் என்ற கருத்தை உள்ளடக்கிய மகத்தான ஒரு நபிமொழியே இது. ஒவ்வொருவரும் தாம் விரும்புவதையே மற்றவர்களுக்கும் விரும்ப வேண்டும். நபியவர்கள் இவர்களுக்குக் கொடுத்த வர்ணனையே இது.

(2) கட்டிடங்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பது போன்று முஸ்லிம்களும் தமக்கு மத்தியில் உதவியொத்தாசை புரிந்து ஒருவருக்கொருவர் ஒற்றுமையைப் பற்றிப்பிடித்துக் கொள்ள வேண்டும் என்பதை இந்நபிமொழி உணர்த்துகின்றது.

(3) முஸ்லிம்கள் தமக்கு மத்தியில் நல்லிணக்கத்துடன், தோலோடு தோல் கொடுத்து, உதவிபுரிவதற்கும், நற்கருமங்கள் இறையச்சத்தில் ஒருவருக்கொருவர் உதவிபுரியவும், இம்மார்க்கத்தை விட்டுப்பிரிந்து விடாமல் அனைவரும் சேர்ந்து

பற்றிப்பிடிப்பதற்குமான அழைப்பை இந்நபிமொழி சுமந்துவந்துள்ளது.

## குழப்பங்களிலிருந்து ஒதுங்குபவனே வெற்றியாளன்

٣٤ - عَـنْ الْمِقْـدَادِ بْـنِ الْأَسْـوَدِ ﷺ، قَـالَ أَيْـمُ اللهِ لَقَـدْ سَـمِعْتُ رَسُـوْلَ اللهِ ﷺ يَقُـوْلُ: "إِنَّ السَّـعِيدَ لَمَـنْ جُنِّـبَ الْفِـتَنَ، إِنَّ السَّـعِيدَ لَمَـنْ جُنِّـبَ الْفِـتَنُ، إِنَّ السَّـعِيدَ لَمَـنْ جُنِّـبَ الْفِـتَنُ، وَلَمَـنْ ابْتُلِـيَ؛ فَصَبَرَ فَوَاهًا".

(سنن أبي داود، رقم الحديث ٤٢٦٣، وصححه الألباني).

(34) அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் நபி (ஸல்) அவர்கள் கூறுவதைக் கேட்டேன்: குழப்பங்களை விட்டும் தூரமாக்கப்பட்டவனே வெற்றியாளன் என்று மூன்று முறை கூறிவிட்டு, மேலும் அக்குழப்பங்களால் சோதிக்கப்பட்டு பொறுமையைக் கடைபிடித்தவனும் வெற்றியாளன். (அவ்வாறு குழப்பங்களில் மூழ்கியிருப்பவனுக்கு) கைசேதம்தான்.

அறிவிப்பவர் : மிக்தாத் பின் அஸ்வத் (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 4263. அஷ்ஷேஹ் அல்பானீ இந்நபிமொழி ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

**ஹதீஸ் அறிவிப்பாளர்:**

மிக்தாத் பின் அம்ரு (ரலி) மிக்தாத் பின் அஸ்வத் அல்கின்தீ என்ற பெயர் மூலம் பிரபலமான நபித்தோழர். நபி (ஸல்) அவர்களுக்கு நெருக்கமாக இருக்கும் இவர் இஸ்லாத்தின் முதல் குதிரைவீரராவார். நபிதோழர்களில் சிறந்த அறிவாளர்களில் ஒருவராகத் திகழ்ந்த இவர் வயதுக்கு வந்த பிறகும் கூட அறப்போருக்கு அழைப்பு விடுக்கப்பட்டால் அவசரமாக பதிலளிக்கக் கூடியவராக இருந்தார்கள். அல்லாஹ்வின் பாதையில் முதலாவதாக குதிரை மீதமர்ந்து போர்செய்த இவர் பத்ர், உஹத், ஹன்தக் மற்றும் அனைத்துப் போர்களிலும் நபியவர்களுடன் கலந்து கொண்டார்கள். அவர்களிடமிருந்து 42 நபிமொழிகள் அறிவித்தும் உள்ளார்கள்.

இந்த மிக்தாத் (ரலி) அவர்கள் கொடைவள்ளலாக இருந்தார்கள். (நபியவர்களின் பேரப்பிள்ளைகளான) ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) ஆகியோருக்கு 36000 திர்ஹங்களும், நபியுடைய ஒவ்வொரு மனைவிமாருக்கும் தலா 7000 திர்ஹங்களும் கொடுக்குமாறு வஸிய்யத் பண்ணினார்கள்.

மதீனாவிலிருந்து 3 மைல்கள் தொலைவிலுள்ள ஜுருப் என்ற ஊரில் தனது 70வது வயதில், உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் ஹி.33ல் மரணித்தார்கள். அங்கிருந்து மதீனாவுக்கு சுமந்து வரப்பட்டு, பகீ.்.இல் அடக்கம் செய்யப்பட்டார்கள். உஸ்மான் (ரலி) அவர்கள் இவருக்குத் தொழுகை நடத்தினார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) குழப்பங்களிலிருந்து பாதுகாப்பு, அமைதி, வாழ்கைப் பேரின்பம், ஊரில் நலவுகள் அதிகரித்தல், அபிவிருத்தி உண்டாதல் ஆகிய அனைத்தும் இறையச்சத்தின் மூலமே உண்டாகின்றன.

(2) இஸ்லாம் என்பது கருணை, அமைதி, பாதுகாப்புள்ள ஒரு மார்க்கமாகும். அதனால்தான் எவ்விதக் குழப்பங்களிலும் (குறிப்பாக அரசியல் குழப்பங்கள்) தலையிட வேண்டாமென முஸ்லிம்களைத் தடை செய்திருக்கின்றது. அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான் :

﴿ وَٱتَّقُواْ فِتۡنَةً لَّا تُصِيبَنَّ ٱلَّذِينَ ظَلَمُواْ مِنكُمۡ خَآصَّةًۖ وَٱعۡلَمُوٓاْ أَنَّ ٱللَّهَ شَدِيدُ ٱلۡعِقَابِ ۝٢٥ ﴾، ( سورة الأنفال، الآية ٢٥).

நீங்கள் சோதனைக்கு பயந்து கொள்ளுங்கள் அது உங்களில் அநியாயம் செய்தவர்களை மட்டும்தான் குறிப்பாகப் பிடிக்கும் என்பதில்லை - நிச்சயமாக அல்லாஹ் தண்டனை அளிப்பதில் கடுமையானவன் என்பதையும் நன்கு அறிந்து கொள்ளுங்கள். (அன்பால் : 25).

(3) குழப்பங்கள் சோதனைகளின் போது பொறுமை காத்து, நற்செயல்களின்பால் விரைந்து, அல்லாஹ்வை வணங்குவதில் ஈடுபடுவதுதான் முஸ்லிமின் கடமையாகும்.

(4) நபிமொழியில் இடம்பெற்றுள்ள “வாஹன்” என்ற சொல்லின் விளக்கம் என்னவெனில் : கைசேதம், அதாவது இது போன்ற குழப்பங்களில் கலந்து கொண்டவனுக்கு ஏற்பட்ட கைசேதமே என்பதாகும். அச்சொல்லின் கருத்து “ஆச்சரியமே” என்பதாகவும் கூறப்படுகின்றது. அதாவது, இதுபோன்ற குழப்ப நிலைகளில் சிக்குண்டு பொறுமை காத்தவனைப் பார்த்து ஆச்சரியப்படுவதே அதன் அர்த்தமாகும். இக்கருத்தும் பொருத்தமானதாகவே உள்ளது.

## கூட்டங்கள் கலையும்போது ஓதும் துஆ

٣٥ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ، قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ ﷺ: "مَنْ جَلَسَ فِيْ مَجْلِسٍ؛ فَكَثُرَ فِيْهِ لَغَطُهُ؛ فَقَالَ قَبْلَ أَنْ يَقُوْمَ مِنْ مَجْلِسِهِ ذَلِكَ : سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ، إِلاَّ غُفِرَ لَهُ مَا كَانَ فِيْ مَجْلِسِهِ ذَلِكَ".

(جامع الترمذي، رقم الحديث ٣٤٣٣، قال الإمام الترمذي عن هذا الحديث: بأنه حسن صحيح غريب، وصححه الألباني).

(35) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் ஒரு சபையில் அமர்ந்து அதில் வீண் பேச்சுக்கள் அதிகமாகி, பின்வரும் துஆவை ஓதினால் அச்சபையில் ஏற்பட்ட பாவங்கள் மன்னிக்கப் படாமலிருக்க மாட்டாது : “ஸுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அன் லாஇலாஹ இல்லா அன்த அஸ்த.்.க்பிருக வஅதூபு இலைக”.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : திர்மிதி 3433, அவர்கள் இதனை ஹஸன் ஸஹீஹ் கரீப் எனும் தரத்திலுள்ளதாகவும், அஷ்ஷேஹ் அல்பானீ ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளனர்.

பொருள் : இறைவா! உன்னைப் புகழ்ந்து துதிக்கிறேன். உண்மையான வணக்கத்திற்குரிய நாயன் உன்னைத் தவிர வேறுயாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். உன்னிடம் பாவமன்னிப்புத் தேடி உன்னடமே மீளுகிறேன்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒரு முஸ்லிம் தனது எல்லாவித அமர்வுகள், சந்திப்புக்கள், இரவுநிகழ்ச்சிகள், கருத்தரங்குகள், பிரயாணம், ஊரிலிருக்கும் போது, வலீமாக்கள், விழாக்கள் அனைத்திலும் அல்லாஹ்வை நினைவு கூர்வது அவசியமாகும்.

(2) இப்பிரார்த்தனையானது சபைகளில் புறம் பேசுதல், கோல்சொல்லல், மக்களின் மானங்களைப் பற்றியோ அவர்களின் தவறுகளைப் பற்றியோ பேசுவதற்கு இடமளிக்கமாட்டாது.

(3) இப்பிரார்த்தனையை மனனமிட்டு ஒவ்வோர் அமர்வு முடியும்போதும் ஓதுவது முஸ்லிமுக்கு விரும்பத்தக்கதாகும்.

**வாரிசுரிமைச் சட்டங்களில் சில...**

**٣٦ - عَنْ أُسَامَةَ بنِ زيدٍ رَضِيَ اللهُ عَنْهُمَا، أنَّ النَّبِيَّ ﷺ قَالَ: "لاَ يَرِثُ الْمُسْلِمُ الْكَافِرَ، وَلاَ الْكَافِرُ الْمُسْلِمَ".**

(صحيح البخاري، رقم الحديث ٦٧٦٤، وصحيح مسلم، رقم الحديث ١ - (١٦١٤)، واللفظ للبخاري).

(36) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : முஸ்லிம் காபிரிடமிருந்தோ, காபிர் முஸ்லிமிடமிருந்தோ அநந்தரச் சொத்துப் பெறமுடியாது.

அறிவிப்பவர் : உஸாமா (ரலி).

ஆதாரம் : புஹாரி 6764, முஸ்லிம் 1614. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

**ஹதீஸ் அறிவிப்பாளர்:**

நபியவர்களின் நேசத்திற்குரியவரான உஸாமா பின் ஸைத்(ரலி), அவர்களின் தந்தை ஸைத் பின் ஹாரிஸ்(ரலி) அவர்கள் நபியவர்களின் பணியாளாக இருந்ததுடன் தனது ஒட்டுமொத்த குடும்பத்தை விட நபியவர்களைத் தேர்ந்தெடுத்தவராவார். உஸாமா (ரலி) அவர்கள் நபியவர்களை தன்பால் நெருக்கி வைக்கும், பெருமதிப்பைப் பெற்றுத்தரும் அனைத்து

நற்குணங்களையும் உள்ளடக்கியவர்களாக இருந்தார்கள்.

இந்த நபித்தோழர் புத்திக்கூர்மை உள்ளவராகவும், சிறந்த வீரராகவும், ஒவ்வொன்றையும் அதற்குரிய இடத்தில் வைக்கும் அறிவுஞானியாகவும், இழிகுணங்களை விட்டும் தூரமானவராகவும், மக்களின் நேசத்திற்குரியவராகவும், பேணுதலுள்ள இறையச்சமுள்ளவராகவும் இருந்தார்கள். இத்தனை சிறந்த குணங்களைக் கொண்டிருந்ததால்தான் நபியவர்கள் இவருடைய 20 வயதைத் தாண்டமுன் அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) மற்றம் பெரும்பெரும் முஹாஜிரீன்களும் அன்ஸாரிகளும் உள்ள ஒரு படைக்குத் தளபதியாக இவரை நியமித்தார்கள். இப்படை புறப்பட்டு தனது குறிக்கோளை அடையுமுன் நபி (ஸல்) அவர்கள் மரணித்தார்கள். பின்பு உமர் (ரலி) அவர்களை தனக்கு உதவிக்கு நிறுத்திவிட்டுச் செல்லுமாறு (உஸாமாவிடம்) அனுமதி பெற்றுவிட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் இப்படையை மீண்டும் அனுப்பிவைத்தார்கள். அங்கு சென்றுவிட்டு உஸாமா அவர்கள் வெற்றியீட்டி, கனீமத்பொருட்களுடன் திரும்பி வந்தார்கள். இவர்கள் அறிவித்த நபிமொழிகள் 118 ஆகும்.

உஸ்மான் (ரலி) ஷஹீதாக்கப்பட்டபின் நடைபெற்ற அரசியல் குழப்பங்களிலிருந்து ஒதுங்கியிருந்தார்கள். பின்பு ஸிரியாவுக்கருகிலுள்ள ஒரு பகுதியில் சிறுகாலம் வாழ்ந்து விட்டு மதீனா திரும்பினார்கள்.

அங்கு ஜுருப் என்ற ஊரில் தனது 61வது வயதில் ஹி.54ல் மரணித்து மதீனாவில் அடக்கப்பட்டார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) முஸ்லிம் காபிரிடமிருந்தோ, காபிர் முஸ்லிமிடமிருந்தோ அநந்தரச் சொத்துப் பெற முடியாது என்பதை இந்நபிமொழி எடுத்துக் காட்டுகின்றது. அக்காபிர் அநந்தரச் சொத்தைப் பங்கு வைக்கமுன்னோ அல்லது பின்னோ இஸ்லாத்தில் இணைந்தாலும் சரியே என்பதுதான் பெரும்பான்மை அறிஞர்களின் கருத்தும் வலுவானதுமாகும். அதேபோன்றுதான் முர்தத்தின் (மதம்மாறியவன்) சட்டமும். அவனுக்கும் முஸ்லிமுக்கும் வாரிசுரிமைத் தொடர்பு கிடையாது.

(2) ஒரு முஸ்லிம் காபிரிடமிருந்து அநந்தரம் பெறுவான், காபிர் முஸ்லிமிடமிருந்து பெறமாட்டான் என்று சில அறிஞர்கள் கூறியுள்ளனர். அதேபோன்று சொத்துக்களைப் பிரிக்க முன் ஒரு காபிர் இஸ்லாத்தில் இணைந்தால் அவனுக்கும் அதில் பங்கு கிடைக்கும் எனவும் சில அறிஞர்கள் கூறியள்ளது குறிப்பிடத்தக்கது.

(3) இஸ்லாத்தின் சிறப்பியல்புகளில் உள்ளதுதான், வாரிசுரிமைச் சட்டங்களை (யாருக்கும் ஆட்சேபனை தொரிவிக்க முடியாதளவு) தெட்டத்தெளிவாக விளக்கியுள்ளது. இந்துமத வேதநூற்களில்கூட இதுபற்றிக் கூறப்படவில்லை.

## மனிதன் எப்போதும் அல்லாஹ்வின் பாதுகாவல் தேவையுள்ளளவன்

٣٧ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ ﷺ: "إِذَا تَشَهَّدَ أَحَدُكُمْ؛ فَلْيَسْتَعِذْ بِاللهِ مِنْ أَرْبَعٍ، يَقُوْلُ: اَللّٰهُمَّ! إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ جَهَنَّمَ، وَمِنْ عَذَابِ الْقَبْرِ، وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ، وَمِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ".

(صحيح مسلم، رقم الحديث ١٢٨ - (٥٨٨)، وصحيح البخاري، رقم الحديث ١٣٧٧، واللفظ لمسلم).

(37) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் அத்தஹிய்யாத்தில் உட்கார்ந்தால் நான்கு விடயங்களை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். அவர் பின்வருமாறு கூறட்டும் : "அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின் அதாபி ஜஹன்னம, வமின் அதாபில் கப்ரி, வமின் பித்னதில் மஹ்யா வல்மமாதி, வமின் ஷர்ரி பித்னதில் மஸீஹித் தஜ்ஜால்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 1377, முஸ்லிம் 588. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

பொருள் : எங்கள் இரட்சகனே! நரக வேதனையிலிருந்தும், கப்ருடைய வேதனையில் இருந்தும், வாழ்வு, மரணம் ஆகியவற்றின் சோதனையிலிருந்தும், தஜ்ஜாலின் குழப்பத்திலுள்ள கெடுதியிலிருந்தும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மனிதன் எப்போதும் அல்லாஹ்வுக்குப் பணிந்து, அடிமைத்தனத்தை வெளிப்படுத்தி, அவன்பால் தேவையுள்ளவனாக இருக்கின்றான் என்பதே இந்நான்கு விடயங்களை விட்டும் பாதுகாப்புத் தேடுவது தெளிவுபடுத்துகின்றது .

(2) இப்பிரார்த்தனையை இறுதி அத்தஹிய்யாத்தில் ஓதுவது ஸுன்னத்தாகும்.

(3) தஜ்ஜாலின் குழப்பம் உண்டு என்பதை இந்நபிமொழி உறுதிப்படுத்துகின்றது. ஆதம்(அலை) படைக்கப்பட்ட நாளிலிருந்து மறுமைக்கிடையிலான மிகப்பெரிய குழப்பம் இதுவே. அவனுக்கு அல்லாஹ் அதீதசக்தியைக் கொடுத்திருப்பதே இதற்குக் காரணமாகும்.

(4) யதார்த்தத்தில் “கப்ரு” என்பது மறைவான உலகத்தில் உயிர்கள் இருக்கும் இடத்தையே நாடப்படுகின்றது. எனினும் மரணித்தோரை அடக்கும் இடத்திற்கும் இது பயன்படுத்தப்படுகின்றது. “எங்கள் இரட்சகனே! கப்ருடைய வேதனையிலிருந்து உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்” என்று ஒருவன் பிரார்த்தித்தால் அது மரணத்திற்கும் மறுமைக்கும் இடையில் மறைவாக நடக்கும் வேதனையையே குறிக்கின்றது.

## தூய எண்ணத்தின் முக்கியத்துவம்

٣٨ - **عَـنْ جَـابِرٍ ﷺ قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللهِ ﷺ: "يُحْشَـرُ النَّـاسُ عَلَى نِيَّاتِهِمْ".**

(سنن ابن ماجه، رقم الحديث ٤٢٣٠، وصححه الألباني، وصحيح مسلم، جزء من رقم الحديث ٨٣ - (٢٨٧٨)، واللفظ لابن ماجه).

(38) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (மறுமையில்) மக்கள் அவர்களின் எண்ணங்களின் அடிப்படையிலேயே எழுப்பப்படுவார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2878, இப்னு மாஜா∴. 4230. இவ்வார்த்தை இப்னு மாஜா∴.வில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 32ம் நபிமொழியில் கூறப்பட்டுவிட்டது.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இஸ்லாத்தில் நிய்யத்தின் (எண்ணம்) மதிப்பு, முக்கியத்துவம், சிறப்பு பற்றி இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. எந்தவொரு நற்கருமமும் அல்லாஹ்வுக்கென்ற தூய்மையான எண்ணத்தில் தான் தங்கியுள்ளது.

(2) எண்ணம் என்பது ஒரு செயலை செய்யும்போதே அதனை நாடுவதாகும். பிறகு செய்வதாக நாடினால் அது உறுதி கொள்வது எனப்படுகின்றது. நிய்யத்தின் யதார்த்தம் குறிப்பிட்ட ஒன்றை செய்யும் போதே நாடுவதாகும்

(3) இந்த தூய எண்ணத்தை அல்குர்குர்ஆன் பல சொற்பிரயோகங்களில் பயன்படுத்தியுள்ளது. உதாரணமாக: மறுமையை நாடுதல், அல்லாஹ்வின் திருமுகத்தை நாடுதல், அவனின் திருமுகத்தைத் தேடுதல், அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தைத் தேடுதல் போன்றன.

## இரவில் பிரார்த்தித்தல்

**٣٩ -عَــنْ جَــابِرٍ ﷺ، أَنَّ رَسُــوْلَ اللهِ ﷺ قَــالَ: "إِنَّ مِــنَ اللَّيْــلِ سَــاعَةً، لاَ يُوَافِقُهَــا عَبْــدٌ مُسْــلِمٌ، يَسْــأَلُ اللهَ خَيْــرًا، إِلاَّ أَعْطَــاهُ إِيَّاهُ".**

(صحيح مسلم، رقم الحديث ١٦٧ - (٧٥٧)، ).

(39) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இரவில் ஒரு நேரமுள்ளது. சரியாக அந்நேரத்தில் ஓர் அடியான் அல்லாஹ்விடத்தில் தனது தேவைகளைக் கேட்டால் அதனை அவனுக்குக் கொடுக்காமலிருக்க மாட்டான்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 757.

அறிவிப்பாளார் பற்றி 32ம் நபிமொழியில் கூறப்பட்டுவிட்டது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஏற்றுக்கொள்ளப்படும் நேரத்தை அடைந்து கொள்ளும் பொருட்டு இரவின் பெரும் பகுதியைப் பிரார்த்தனையில் கழிப்பதற்கு இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது.

(2) இந்த பரகத் செய்யப்பட்ட நேரத்தை அடைந்து கொள்ள அடியார்கள் முயற்சி செய்யவேண்டும் என்பதனால் அல்லாஹ் அதனை மறைத்து வைத்துள்ளான். வெள்ளிக்கிழமை முழுவதும் அடியார்கள் பிரார்த்தனையில் ஈடுபட்டு ஏற்கப்படும் அந்நேரத்தை அடைய முயற்சிக்க வேண்டும் என்பதற்காக அதனை மறைத்தது போன்றே இதனையும் மறைத்துள்ளான்.

(3) இரவின் அனைத்து நேரங்களிலும் பிரார்த்தனையில் ஈடுபடுவதை இந்நபிமொழி தூண்டுகின்றது. எனினும் இரவில் ஆரம்பத்தை விட இறுதிப்பகுதியே தொழுகை, துஆ, இஸ்தி.்.பார் ஆகியவற்றிற்கு மிகப்பொருத்தமான நேரமாகும்.

### துன்பங்கள் நீங்க தொழுகையே சிறந்த வழி

٤٠ - عَـنْ حُذَيْفَـةَ ﷺ قَـالَ: كَـانَ الـنَّبِيُّ ﷺ إِذَا حَزَبَـهُ أَمْـرٌ صَلَّى.

(سنن أبي داود، رقم الحديث ١٣١٩، وحسنه الألباني).

(40) நபி (ஸல்) அவர்களுக்கு ஏதாவது கடின நிலை ஏற்பட்டால் தொழுகையின் பக்கம் செல்வார்கள்.

அறிவிப்பவர் : ஹுதைபா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 1319. அஷ்ஷேஹ் அல்பானீ இந்நபிமொழி ஹஸன் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் கூறப் பட்டுவிட்டது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒரு விடயத்தில் உறுதியா நிற்க தொழுகையே பேருதவியாக இருக்கின்றது என்பதை இந்நபிமொழி உணர்த்துகின்றது. எனினும் அவ்வாறு தொழும் போது கேட்பதற்கென்று குறிப்பிட்ட துஆக்கள் ஏதும் கிடையாது. மாறாக ஒரே துஆவைக் கேட்டுக் கொண்டிருக்காமல் பலவிதமான துஆக்களைக் கேட்கவேண்டும். தொழுகையின் மூலம் உதவி தேடலாம் என்பதனை உண்மைப்படுத்தும் விதமாக அல்குர்ஆனிலும் வசனங்கள் இடம்பெற்றுள்ளன :

﴿ وَٱسْتَعِينُوا۟ بِٱلصَّبْرِ وَٱلصَّلَوٰةِ ۚ وَإِنَّهَا لَكَبِيرَةٌ إِلَّا عَلَى ٱلْخَٰشِعِينَ ﴿٤٥﴾ ﴾ ،
(سورة البقرة، الآية ٤٥).

"மேலும் பொறுமையைக் கொண்டும், தொழுகையைக் கொண்டும் (அல்லாஹ்விடம்) உதவி தேடுங்கள்". (அல்பகரா : 45)

﴿ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ ٱسْتَعِينُواْ بِٱلصَّبْرِ وَٱلصَّلَوٰةِۚ إِنَّ ٱللَّهَ مَعَ ٱلصَّٰبِرِينَ ١٥٣ ﴾ ، (سورة البقرة، الآية ١٥٣).

"நம்பிக்கை கொண்டோரே! பொறுமையுடனும், தொழுகையுடனும் (இறைவனிடம்) உதவி தேடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பொறுமை உடையவர்களுடன் இருக்கிறான்". (அல்பகரா: 153). எனவே தொழுகை துன்பங்களை நீக்கவும், குழப்பங்கள் ஏற்படாமல் தடுக்கவும் முக்கிய காரணமாக இருக்கின்றது.

(2) நபி (ஸல்) அவர்கள் தனக்கு ஏதாவது துன்பங்கள் ஏற்பட்டால் தொழுகையின் பக்கம் திரும்புவார்கள் என்பதை இந்நபிமொழி தெளிவு படுத்துகின்றது. எனவே அவ்விடயத்தில் நாமும் அவர்களைப் பின்பற்ற வேண்டும்.

(3) கடின நிலை ஏற்பட்டால் என்பதன் விளக்கம்: நபி (ஸல்) அவர்களுக்கு முக்கியமான விடயம் ஏதும் வந்தால் அல்லது துன்பம் ஏற்பட்டால் என்பதாகும்.

## வெண்நிற ஆடையின் சிறப்பு

٤١ -عَـنْ عَبْـدِ اللهِ بْـنِ عَبَّـاسٍ رَضِـيَ اللَّـهُ عَنْهُمَـا قَـالَ: قَـالَ رَسُـولُ اللَّـهِ ﷺ: "اِلْبَسُـوا مِـنْ ثِيَـابِكُمْ الْبَيَـاضَ؛ فَإِنَّهَـا مِنْ خَيْرِ ثِيَابِكُمْ، وَكَفِّنُوْا فِيْهَا مَوْتَاكُمْ".

(جامع الترمذي، رقم الحديث ٩٩٤، وسنن أبي داود، رقم الحديث ٣٨٧٨، و سنن ابن ماجه، رقم الحديث ١٤٧٢، وقال الإمام الترمذي عن هذا الحديث بأنه: حسن صحيح، واللفظ للترمذي، وصححه الألباني).

(41) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களுடைய ஆடைகளில் வெண்ணிறத்தைத் தெரிவு செய்து அணியுங்கள். ஏனெனில் உங்களுடைய சிறந்த ஆடைகளில் அதுவும் ஒன்று. அதே (வெண்ணிற) ஆடையிலேயே உங்களில் மரித்தோரைக் கபனிடுங்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 3878, திர்மிதி 994, இப்னு மாஜா.ஃ. 1472. இவ்வார்த்தை திர்மிதீயில் இருந்து பெறப்பட்டது. அவர்கள் மற்றும் அஷ்ஷேஹ் அல்பானீ ஆகியோர் இதனை ஹஸன் ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளனர்.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவா்கள் பிரபலமான ஒரு நபித்தோழராவாா். அவருடைய புனைப்பெயா் அபுல் அப்பாஸ். நபித்தோழா்களில் சிறந்த அடையாளங்களுள் ஒருவா், இந்த உம்மத்தின் அறிவுக்கடல், அல்குர்ஆனிற்கு சிறந்த விரிவுரையாளர் என்றெல்லாம் போற்றப்பட்டவர். நபிகளாரின் பெரிய தந்தையின் மகனுமாவார். ஹிஜ்ரத்திற்கு 3 ஆண்டுகளுக்கு முன்னா், பனூ ஹாஷிம் குடும்பத்தினா் கனவாயில் முற்றுகையிடப் பட்ட நேரத்தில் அதிலிருந்து வெளிவருமுன் இவா்கள் பிறந்தாா்கள். பின்பு நபிகளாருடன் கூடவே இருந்து அவா்களிடமிருந்து நிறைய அறிவைப் பெற்றுக்கொண்டாா்கள். அவா்களைத் தொட்டும் 1660 ஹதீஸ்களை அறிவித்திருக்கின்றார். நபியவா்கள் மரணிக்கும் போது இவருக்கு வயது 13. அலீ (ரலி) அவா்கள் இவரை பஸராவுக்கு கவர்னராக நியமித்தாா்கள். தனது 70ம் வயதில் ஹிஜ்ரி 68ம் ஆண்டு தாஇபில் மரணமடைந்தார். (அவருடைய வயது 71 அல்லது 74 என்று வேறு இருகருத்துக்களும் உள்ளன.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) வெண்நிற ஆடைகள் சிறந்ததாகவும், தூய்மையானதாகவும் இருப்பதால் அவ்வாறான ஆடைகளை அணிவதும், அவற்றைப் பயன்படுத்தி மரித்தோருக்குக் கபனிடுவதும் விரும்பத்தக்கது

என்பதை இந்நபிமொழி உணர்த்துகின்றது. அந்த நிறத்தில் அழகு இருப்பதால் அது சிறந்தது என்பது தெளிவானது. அதனை எவ்வாறு தூய்மையானது என்று கூறுவதெனில், வெள்ளை நிற ஆடைகளில் மணலோ, அழுக்கோ, அசுத்தமோ பட்டால் தெளிவாகத் தெரிந்துவிடும். எனவே உடனே அது கழுவப்பட்டு சுத்தமானதாக மாறிவிடும். (அதாவது வெள்ளை நிற ஆடைகளில் அழுக்குகள் பட்டால் அதனைச் சுத்தம் செய்யத் தாமதப்படுத்த மாட்டோம். அதனால் எப்போதுமே அது சுத்தமானதாகத்தான் இருக்கும்.)

(2) இந்நபிமொழியின் அடிப்படையில் இது விடயத்தில் ஆண்களின் சட்டமே பெண்களுக்கும் என்று தோன்றுகின்றது. குறிப்பாக இதில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் மத்தியில் வேறுபாடு காட்ட வலுவான ஆதாரங்கள் கிடையாது. அவ்வாறு வேறுபாடு உண்டென்போர் ஆதாரம் முன்வைக்க வேண்டும். பெண்கள் ஆண்களின் சகோதரிகள். பெண்களுக்கென்று வித்தியாசமான சட்டங்கள் ஆதார அடிப்படையில் இல்லாத பட்சத்தில் அல்லாஹ் ஆண்களுக்கு விதித்துள்ள சட்டத்தில் பெண்களும் உட்படுவர்.

## நோன்பு திறக்க சிறந்த முறை

٤٢ - عَـنْ أَنَـسِ بْـنِ مَالِـكٍ ﷺ، يَقُـوْلُ: كَـانَ رَسُـولُ اللّٰهِ ﷺ: يُفْطِـرُ عَلَـى رُطَبَـاتٍ قَبْـلَ أَنْ يُصَـلِّيَ؛ فَـإِنْ لَـمْ تَكُـنْ رُطَبَـاتٌ؛ فَعَلَـى تَمَرَاتٍ؛ فَإِنْ لَمْ تَكُنْ؛ حَسَا حَسَوَاتٍ مِنْ مَاءٍ".

(سنن أبي داود، رقم الحديث ٢٣٥٦، وجامع الترمذي، رقم الحديث ٦٩٦، قال الإمام الترمذي عن هذا الحديث بأنه: حسن غريب، واللفظ لأبي داود، وحسنه الألباني وصححه).

(42) நபி (ஸல்) அவர்கள் (ம.ஃ.க்ரிப்) தொழ முன்னர் சில கனிந்த பேரீத்தம் பழங்களால் நோன்பு திறப்பார்கள். அது கிடைக்காவிட்டால் சில காய்ந்த பேரீத்தம் பழங்கள். அதுவும் கிடைக்கா விட்டால் மூன்று மிடர் தண்ணீர் குடித்துக் கொள்வார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 2356, திர்மிதி 696. இவ்வார்த்தை அபூ தாவூதில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீஇதனை ஹஸன் ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளார் பற்றி 4ம் நபிமொழியில் கூறப் பட்டுவிட்டது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மஃ.ரிப் தொழ முன்னர் நோன்பாளி கனிந்த பேரீத்தம்பழங்களைக் கொண்டு, அது இல்லாத பட்சட்த்தில், காய்ந்த பேரீத்தம் பழங்களைக் கொண்டு, அதுவும் இல்லாத பட்சத்தில் தண்ணீரைக் கொண்டு, அதுவும் இல்லாத பட்சத்தில் அல்லாஹ் ஹலாலாக்கிய, அவரிடம் உள்ள ஏதாவதைக் கொண்டு நோன்பு திறப்பது ஸுன்னத்தாகும்.

(2) நோன்பு என்பது சில (உண்ணல், பருகல், உறவுகொள்ளல் போன்ற) குறிப்பிட்ட விடயங்களை விட்டும் பஜ்ர் முதல் சூரியன் மறையும் வரை தவிர்ந்து கொள்வதன் மூலம் அல்லாஹ்வை வணங்குவதாகும்.

**ஸுஜூதில் ஏழு உறுப்பக்கள் பட வேண்டும்**

٤٣ - عَنْ عَبْدِ اللهِ بْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ: " أُمِرْتُ أَنْ أَسْجُدَ عَلَى سَبْعَةِ أَعْظُمٍ عَلَى الْجَبْهَةِ وَأَشَارَ بِيَدِهِ عَلَى أَنْفِهِ وَالْيَدَيْنِ وَالرُّكْبَتَيْنِ وَأَطْرَافِ الْقَدَمَيْنِ، وَلاَ نَكْفِتَ الثِّيَابَ وَالشَّعَرَ".

(صحيح البخاري، رقم الحديث ٨١٢، وصحيح مسلم، رقم الحديث ٢٣٠ - (٤٩٠)، واللفظ للبخاري).

(43) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நெற்றி- மூக்கையும் தனது கையால் சுட்டிக் காட்டினார்கள்-, இரு கைகள், இரு முட்டுக்கால்கள், இரு கால்களின் விரல்நுனிகள் ஆகிய ஏழு உறுப்புக்கள் மீது நான் ஸுஜூது செய்யவும், எமது ஆடைகளையோ அல்லது முடிகளையோ சேர்த்துக் கட்டாமல் அவ்வாறே விட்டுவிடவும் ஏவப் பட்டுள்ளேன்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி).

ஆதாரம் : புஹாரி 812, முஸ்லிம் 490. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளார் பற்றி 41ம் நபிமொழியில் கூறப்பட்டுவிட்டது.

### ☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:

(1) பின்வரும் ஏழு உறுப்புக்களும் ஸுஜூதின்போது கண்டிப்பாக நிலத்தில் படவேண்டுமென இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. அவையாவன : மூக்குடன் சேர்த்து நெற்றி, இரு கைகள், இரு முட்டுக்கால்கள், இரு கால்களின் விரல்நுனிகள்.

(2) ஒருவன் ஸுஜூதின்போது தனது இருகால்களையுமோ அல்லது ஒருகாலையோ பூமியை விட்டும் உயர்த்தினால் அவனுடைய தொழுகை பூரணமாகவோ, செல்லுபடியாகவோ மாட்டாது. அதேபோன்றுதான் ஸுஜூதுடைய ஏனைய உறுப்புக்களும்.

(3) இந்த ஏழு உறுப்புக்கள் மீது ஸுஜூது செய்வது ஆண், பெண் இருபாலருக்கும் கடமையாகும். அதில் கவனையீனமின்றி நடந்துகொள்வது அவசியமாகும். நெற்றி மூக்குடன் சேர்த்து (ஸுஜூதில்) ஓரே உறுப்பாகக் கணிக்கப்படுகின்றது.

**உள்ளங்களை மாற்றுபவன் அல்லாஹ்வே**

**٤٤ - عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَقُوْلُ: إِنَّهُ سَمِعَ رَسُوْلَ اللّٰهِ ﷺ يَقُوْلُ: "إِنَّ قُلُوْبَ بَنِيْ آدمَ كُلَّهَا بَيْنَ إِصْبَعَيْنِ مِنْ أَصَابِعِ الرَّحْمَنِ كَقَلْبٍ وَاحِدٍ، يَصْرِفُهُ حَيْثُ يَشَاءُ"، ثُمَّ قَالَ رَسُوْلُ اللّٰهِ ﷺ: "اللَّهُمَّ مُصَرِّفَ الْقُلُوْبِ صَرِّفْ قُلُوْبَنَا عَلَى طَاعَتِكَ".**

(صحيح مسلم، رقم الحديث ١٧ - (٢٦٥٤)،).

(44) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அடியார்கள் உள்ளங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் இரு விரல்களுக்கிடையே ஒரு உள்ளத்தைப் போன்றிருக்கின்றன. அதனை அவன் நாடியவாறு பிரட்டி விடுகின்றான். பின்பு நபியவர்கள் பின்வருமாறு கூறினார்கள் : உள்ளங்களைத் திருப்புபவனே எங்களுடைய உள்ளங்களை உன்னை வழிப்படுதன்பால் திருப்பிவிடு.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ரு பின் ஆஸ் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2654.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அப்துல்லாஹ் பின் அம்ரு பின் ஆஸ் அல்குரஷீ அஸ்ஸுஹமீ என்ற இவர் அறியப்பட்ட சிறந்த நபித்தோழராவார். தனது தந்தைக்கு முன்னரே இவர் இஸ்லாத்தில் இணைந்து கொண்டார். இவருடைய 700 பொன்மொழிகள் நபிமொழிக் கிரந்தங்களில் பதியப்பட்டுள்ளன. நபியவர்களுடன் சில யுத்தங்களில் கலந்து கொண்டதுடன், அரசியல் துறையிலும், நிர்வாகத்துரையிலும் இவர்கள் பிரபலமானவராக இருந்தார்கள். இதனால் முஆவியா (ரலி) அவர்கள் தனது ஆட்சியின் போது குறிப்பட்ட காலத்திற்கு கூபா நகரத்திற்கு கவர்னராக நியமித்தார்கள்.

எகிப்திலுள்ள ஜாமிஉல் புஸ்தாத்தில் (தற்போது அம்ரு இப்னுல் ஆஸ் பள்ளி) நபியவர்களின் பொன்மொழிகளை அறிவித்துக்கொண்டும், மார்க்கத் தீர்ப்பு வழங்கிக் கொண்டும் இருந்தார்கள். அவரிடமிருந்து எக்ப்து, ஸிரியா, ஹிஜாஸ் (தற்போதய மக்கா, மதீனா, ஜித்தா, தாஇப்) போன்ற நகரங்களிலிருந்து அதிகமானோர் கல்வி கற்றுக்கொண்டனர். ஹி. 65ல் எகிப்தில் தனது வீட்டிலே மரணித்து அங்கேயே அடக்கம் செய்யப் பட்டார்கள். (இவர் மரணித்த இடம் மக்கா, ஸிரியா என வேறு இரு கருத்துக்களும் உள்ளன).

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மார்க்கத்தில் உறுதியாக இருப்பதற்கான வழிமுறைகளைக் கையாள்வது முஸ்லிமுக்கு அவசியமாகும் என்பதை இந்நபிமொழி வேண்டி நிற்கின்றது. ஏனெனில் முடிவுகள் அவற்றின் முன்னேற்பாடுகளுக்கமையவே அமைகின்றன. மேலும் காரண காரியங்கள் அவற்றின் காரணங்களுடனேயே பிணைக்கப்பட்டுள்ளன. அல்லாஹ்வின் நியதிகள் எப்போதும் மாறமாட்டாது.

(2) ஒருவன் தீர்க்கமான சரியான முடிவை தன்னைப் படைத்து வாழ்வாதாரம் வழங்கும் அல்லாஹ்வினை முன்னோக்கி எடுப்பானாயின் அல்லாஹ் அவனுடைய உள்ளத்தை பாதுகாப்பு, அமைதி, நிம்மதி, சந்தோசத்தால் நிரப்புகின்றான். மாறாக, தன்னைப் படைத்து வாழ்வாதாரம்

வழங்கும் அல்லாஹ்வினை முன்னோக்கி தவறான முடிவுவை எடுப்பானாயின் அச்சம், தடுமாற்றம், ஒடுக்குமுறையால் அவனுடைய உள்ளத்தை நிரப்புகின்றான். ஏனெனில் அடியபார்களின் உள்ளங்கள் அல்லாஹ்விடமே இருக்கின்றன. மனிதனின் கையிலல்ல.

(3) அல்லாஹ்வுக்கு அவனது தகுதிக்கேற்ப விரல்கள் இருப்பதாக, உருவகப்படுத்தாமல், வடிவம் கொடுக்காமல், முடக்காமல், வர்ணிக்காமல் விசுவாசங் கொள்வது அவசியமாகும்.

### இரு ஸஜ்தாக்களுக்கிடையில் பிரார்த்தனை

٤٥ - عَنْ حُذَيْفَةَ ﷺ أنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُوْلُ بَيْنَ السَّجْدَتَيْنِ: "رَبِّ اغْفِرْ لِي، رَبِّ اغْفِرْ لِي".

(سنن ابن ماجه، رقم الحديث ٨٩٧، وسنن أبي داود، رقم الحديث ٨٧٤ ، وسنن النسائي، رقم الحديث ١١٤٥، واللفظ لابن ماجه، وصححه الألباني).

(45) நபி (ஸல்) அவர்கள் இரு ஸஜ்தாக்களுக்கும் இடையில் “ரப்பி.:.பிர்லீ ரப்பி.:.பிர்லீ” (இறைவா! என்னுடைய பாவங்களை மன்னித்துவிடு) என்று கூறுவார்கள்.

அறிவிப்பவர் : ஹுதைபா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 874, நஸாஈ 1145, இப்னு மாஜா.. 897. இவ்வார்த்தை இப்னு மாஜா.்.வில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளார் பற்றி 4ம் நபிமொழியில் கூறப் பட்டுவிட்டது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) (தொழுகையில்) இரு ஸஜ்தாக்களுக்கும் இடையில் உட்காரும் நடுவிருப்பில் மேற்கண்ட துஆவை ஓத வேண்டும் என்பதை இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது.

(2) நடுவிருப்பில் துஆக்கேட்பது நபி (ஸல்) அவர்களின் வழிமுறையாகும். இதில் பல நபிமொழிகள் பலதரப்பட்ட வார்த்தைகளுடன் இடம்பெற்றுள்ளது. விரிவஞ்சி விட்டோம்.

### இரு ஸஜ்தாக்களுக்கிடையில் பிரார்த்தனை

٤٦ - عَـنْ عَبْـدِ اللهِ بْـنِ عَبَّـاسٍ رضـي الله عنهمـا قَـالَ: كَـانَ رَسُـولُ اللهِ ﷺ يَقُـوْلُ بَـيْنَ السَّـجْدَتَيْنِ فِـيْ صَـلاَةِ اللَّيْـلِ: "رَبِّ اغْفِـرْ لِـي وَارْحَمْنِـي وَاجْبُرْنِـي وَارْزُقْنِـي وَارْفَعْنِي".

(سنن ابن ماجه، رقم الحديث ٨٩٨، وسنن أبي داود، رقم الحديث ٨٥٠ و جامع الترمذي، رقم الحديث ٢٨٤، واللفظ لابن ماجه، قَالَ الإمام الترمذي: هذا حديث غريب، وصحح الألباني حديث ابن ماجه والترمذي).

(46) நபி (ஸல்) அவர்கள் இரவுத்தொழுகையில் இரு ஸஜ்தாக்களுக்கும் இடையில் பின்வரும் துஆவை ஓதுவார்கள் : "ரப்பி.ஃ.பிர்லீ வர்ஹம்னீ வஜ்புர்னீ வர்ஸுக்னீ வர்ப.ஃ.னீ".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 850, திர்மிதீ 284, இப்னு மாஜா.ஃ. 898. இவ்வார்த்தை இப்னு மாஜா.ஃ.வில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாக கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 41ம் நபிமொழியில் கூறப்பட்டுவிட்டது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மனிதன் தேவையுறும் ஈருலக வெற்றி, மகிழ்ச்சிக்கான காரணிகளை மேற்கண்ட பிரார்த்தனை உள்ளடக்கியுள்ளது. மேலும் அவன் வெறுக்கும் அனைத்து கெட்ட விடயங்களிலிருந்தும் பாதுகாப்பும் உள்ளது.

(2) இஸ்லாம் ஒன்றே மனிதவெற்றிக்கு வழி, அதனைப் பின்பற்றுவோர் வெற்றியாளர். அதனைப் புறக்கனிப்போர் தோற்றோர்.

## ஈமானும் இஸ்லாமும்

٤٧ - عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ: كَانَ النَّبِيُّ ﷺ بَارِزًا يَوْمًا لِلنَّاسِ؛ فَأَتَاهُ جِبْرِيلُ عليه السلام؛ فَقَالَ: مَا الْإِيمَانُ؟ قَالَ: "الْإِيمَانُ: أَنْ تُؤْمِنَ بِاللَّهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ، وَبِلِقَائِهِ وَرُسُلِهِ، وَتُؤْمِنَ بِالْبَعْثِ"، قَالَ: مَا الْإِسْلَامُ؟ قَالَ: "الْإِسْلَامُ: أَنْ تَعْبُدَ اللَّهَ وَلاَ تُشْرِكَ بِهِ، وَتُقِيمَ الصَّلَاةَ، وَتُؤَدِّيَ الزَّكَاةَ الْمَفْرُوضَةَ، وَتَصُومَ رَمَضَانَ، قَالَ: مَا الْإِحْسَانُ؟ قَالَ: "أَنْ تَعْبُدَ اللَّهَ كَأَنَّكَ تَرَاهُ، فَإِنْ لَمْ تَكُنْ تَرَاهُ؛ فَإِنَّهُ يَرَاكَ"، قَالَ: مَتَى السَّاعَةُ؟ قَالَ: "مَا الْمَسْئُولُ عَنْهَا بِأَعْلَمَ مِنَ السَّائِلِ، وَسَأُخْبِرُكَ عَنْ أَشْرَاطِهَا: إِذَا وَلَدَتِ الْأَمَةُ رَبَّهَا، وَإِذَا تَطَاوَلَ رُعَاةُ الْإِبِلِ الْبُهْمُ فِي الْبُنْيَانِ، فِي خَمْسٍ لاَ يَعْلَمُهُنَّ إِلاَّ اللَّهُ، ثُمَّ تَلا النَّبِيُّ ﷺ: ﴿ إِنَّ ٱللَّهَ عِندَهُۥ عِلْمُ ٱلسَّاعَةِ ﴾، (لقمان: ٣٤) الآيَةَ، ثُمَّ أَدْبَرَ، فَقَالَ: "رُدُّوهُ"؛ فَلَمْ يَرَوْا شَيْئًا؛ فَقَالَ: "هَذَا جِبْرِيلُ، جَاءَ يُعَلِّمُ النَّاسَ دِينَهُمْ".

(صحيح البخاري، رقم الحديث ٥٠، وصحيح مسلم، رقم الحديث ١ - (٩)، واللفظ للبخاري).

(47) நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் மக்கள் முன் தேன்றினார்கள். அப்போது அவர்களிடத்தில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து ஈமான் என்றால் என்ன? என்று கேட்டார்கள். (அதற்கு நபியவர்கள்) ஈமான் என்பது : நீா அல்லாஹ்வையும், அவனுடைய மலக்குமார்கள், வேதங்கள், அவனை சந்தித்தல், அவனுடைய தூதர்கள் ஆகியவற்றை நம்புவதும், மறுமையில் எழுப்பப்படுவதை நம்புவதுமாகும் என்றார்கள். இஸ்லாம் என்றால் என்ன? என்று (ஜிப்ரீல்) கேட்டார். (நபியவர்கள்) இஸ்லாம் என்பது நீர் அல்லாஹ்வுக்கு இணைவைக்காமல் அவனை மாத்திரம் வணங்குதல், தொழுகையை நிறை வேற்றல், கடமையான ஸகாத்தை நிறைவேற்றல், நோன்பு நோற்றல் என்பனவாகும் என்றார்கள். இஹ்ஸான் என்றால் என்ன? என்று (ஜிப்ரீல்) கேட்டார். (நபியவர்கள்) நீர் அல்லாஹ்வை நேரடியாகக் காண்பது போன்று வணங்குவதே இஹ்ஸான் ஆகும். நீர் அவனைக் காணாவிட்டாலும் அவன் உன்னைப் பார்க்கிறான். மறுமை எப்போது? என்று (ஜிப்ரீல்) கேட்டார். (நபியவர்கள்) கேள்வி கேட்டவரை விட கேட்கப்பட்டவர் இது விடயத்தில் அறிவாளி கிடையாது. எனினும் அதன் சில அடையாளங்களைக் கூறுகிறேன்: அடிமைகள் தமது எஜமானியைப் பெற்றெடுத்தல், ஒட்டக மேய்ப்பாளர்கள் கட்டிடங்களை உயர்த்திக் கட்டுவதில் போட்டி போடுவார்கள், மறுமை பற்றிய

அறிவு குர்ஆனில் கூறப்பட்டுள்ள அல்லாஹ்வைத் தவிர யாரும் அறியாத ஐந்து விடயங்களிலுள்ளது. பின்பு "நிச்சயமாக மறுமை பற்றிய அறிவு அல்லாஹ்விடமே" என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்கள். பின்பு அவர் சென்று விட்டார். நபியவர்கள்: அவரைத் திருப்பி அனுப்பிவிடுங்கள் என்றார்கள். அத்தோழர்கள் அங்கு எந்த ஒன்றையும் காணவில்லை. நபியவர்கள்: அது (வந்தவர்) ஜிப்ரீல் (அலை), மக்களுக்கு அவர்களது மார்க்கத்தைக் கற்றுக்கொடுக்க வந்தார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 50, முஸ்லிம் 9. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இது இஸ்லாத்தின் உள்ரங்க, வெளிரங்க அடிப்படைகளை உள்ளடக்கியுள்ள மகத்தான ஒரு நபிமொழியாகும்.

(2) இஸ்லாம் என்பது கொள்கை, செயல் இரண்டையுமே உள்ளடக்கியுள்ளதை இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. சரியான கொள்கை இல்லாமல் செயற்கள் ஏற்கப்படவோ, செயற்கள் இல்லாமல்

கொள்கை மாத்திரம் ஏற்கப்படவோ மாட்டாது. ஏனெனில் கொள்கை, செயல் ஆகிய இரண்டின் மொத்தவடிவமே இஸ்லாம். உள்ளத்திலுள்ள அடிப்படை ஈமானை செயற்கள்தான் பறை சாற்றுவதால் இஸ்லாம் அனைத்து விதமான வழிபாடுகளையும் உள்ளடக்கியுள்ளது.

(3) ஈமான் என்பது சொல், செயல், எண்ணம் மூன்றையும் உள்ளடக்கியதை இந்நபிமொழி உணர்த்துகின்றது. அதன் விளக்கம், ஈமான் என்பது நாவினால் மொழிதல், உள்ளத்தால் ஏற்றுக் கொள்ளல். உறுப்புக்களால் நடைமுறைப் படுத்தலாகும்.

### நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்லல்

٤٨ - عَنْ أَبِيْ طَلْحَةَ ﷺ أَنَّ رَسُوْلَ اللّٰهِ ﷺ جَاءَ ذَاتَ يَوْمٍ وَالْبُشْرَى فِيْ وَجْهِهِ؛ فَقُلْنَا: إِنَّا لَنَرَى الْبُشْرَى فِيْ وَجْهِكَ!؛ فَقَالَ: إِنَّهُ أَتَانِيَ الْمَلَكُ؛ فَقَالَ يَا مُحَمَّدُ! إِنَّ رَبَّكَ يَقُوْلُ: أَمَا يُرْضِيْكَ؟ أَنَّهُ لاَ يُصَلِّيْ عَلَيْكَ أَحَدٌ إِلاَّ صَلَّيْتُ عَلَيْهِ عَشْرًا، وَلاَ يُسَلِّمُ عَلَيْكَ أَحَدٌ إِلاَّ سَلَّمْتُ عَلَيْهِ عَشْرًا".

(سنن النسائي، رقم الحديث ١٢٨٣، وحسنه الألباني).

(48) நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் தனது முகத்தில் மகிழ்ச்சி பொங்கியவராக வந்தார்கள். நிச்சயமாக தாங்கள் முகத்தில் மகிழ்ச்சியைக் காண்கிறோம்? என்று கேட்டோம். அதற்கு நபியவர்கள்: என்னிடம் வானவர் வந்து முஹம்மதே! உங்களது நாயன் உங்களை பொருந்திக் கொள்ள வேண்டாமா? நிச்சயமாக யாராவது உங்கள் மீது (ஒரு) ஸலவாத் கூறினால் அவன் மீது நான் பத்து ஸலவாத் கூறாமலிருப்பதில்லை. மேலும் யாராவது உங்கள் மீது (ஒரு) ஸலாம் கூறினால் அவன் மீது நான் பத்து ஸலாம் கூறாமலிருப்பதில்லை.

அறிவிப்பவர் : அபூ தல்ஹா (ரலி).

ஆதாரம் : நஸாஈ 1283. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

### ✐ஹதீஸ் அறிவிப்பாளர்:

இவர் பெயர் ஸைத் பின் ஸஹ்ல் பின் அஸ்வத் அல்கஸ்ரஜீ அந்நஜாரீ அல் அன்ஸாரீ என்பதாகும். அபூதல்ஹா என்ற புனைப்பெயர் கொண்டு பிரபலமான இவர் நபியுடைய தாய்வழி உறவுக்காரராகவும், அகபா உடன்படிக்கையில் கலந்துகொண்ட 12 தலைவர்களுள் ஒருவராகவும்

இருந்தார்கள். பின்பு பத்ர் போரிலும் அதன்பின் நடந்த அனைத்து யுத்தங்களிலும் நபிகளாருடன் கலந்து கொண்டார். இஸ்லாத்திற்கு மிகவும் பக்கபலமாக இருந்த இவர்கள்தான் நபியவர்கள் மரணித்ததும் அவர்களை அடக்கம்செய்ய மண்ணறை தோன்றியவர். இவர் 92 நபிமொழிகளை அறிவித்துள்ளார்.

அபூதல்ஹா (ரலி) அவர்கள் தனது வாழ்கையை நோன்பிலும் ஜிஹாதிலுமே கழித்து வந்து அதே நிலையிலேயே கடலில் யுத்தம் செய்யும்போது மரணித்தார்கள். ஏழு நாட்களுக்குப் பின்னரே அவர்களுடைய உடலை அடக்கம் செய்ய தரையை அடைந்தார்கள். அதுவரை அவருடைய உடலில் மாற்றங்கள் எதுவும் இருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அன்னார் ஹிஜ்ரி 50 அல்லது 51ல் தனது 70ம் வயதில் மரணமடைந்தார். 34ம் ஆண்டு மரணித்ததாகவும் அறிவிப்புக்கள் இடம்பெற்றுள்ளன. உஸ்மான் (ரலி) அவர்கள் இவருக்கு தொழுகை நடத்தினார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்வதை அதிகப்படுத்துவதை இந்நபிமொழி தூண்டுகின்றது. அவர்கள் மீது ஸலவாத் சொல்வதில் மிகச்சிறந்த முறை :

"اَللَّهُـمَّ صَـلِّ عَلَـى مُحَمَّـدٍ وَعَلَـى آلِ مُحَمَّـدٍ، كَمَـا صَـلَّيْتَ عَلَـى إِبْـرَاهِيْمَ، وَعَلَـى آلِ إِبْرَاهِيْمَ، إِنَّـكَ حَمِيْـدٌ مَجِيْـدٌ، اَللَّهُـمَّ بَـارِكْ عَلَـى مُحَمَّـدٍ وَعَلَـى آلِ مُحَمَّـدٍ، كَمَـا بَارَكْـتَ عَلَـى إِبْرَاهِيْمَ،وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ، إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ ".

(صحيح البخاري، رقم الحديث ٣٣٧٠،وصحيح مسلم، رقم الحديث ٦٦ - (٤٠٦)، واللفظ للبخاري).

(அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலாஆலி முஹம்மதின் கமா ஸல்லைத அலா இப்ராஹீம வஅலாஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலாஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலாஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீத்)

பொருள் : இறைவா! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ கருணை புரிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் கருணை புரிந்திடு. நீயே புகழுக்குரியவனும், கண்ணியமிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ உன் அருள் வளத்தைப் பொழிந்தைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார்

மீதும் உன் அருள் வளத்தைப் பொழிந்திடு, நீயே புகழுக்குரியவனும், கண்ணியமிக்கவனும் ஆவாய்.

(2) அல்லாஹ், ரஸூல் மீது ஸலவாத் சொல்வதன் அர்த்தம் என்னவென்றால், அவன் நபியவர்களை கண்ணியப்படுத்தி புகழ்வதாகும். "அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத்" என்றால் இறைவா! நபியவர்களை ஈருலகிலும் அவர்களுடைய தகுதிக்கேற்ப கண்ணியப்படுத்து என்பதாகும்.

(3) நபியவர்கள் மீது ஸலாம் சொல்வதையும் இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. அதற்கு ஆதாரமாக பின்வரும் அல்குர்ஆன் வசனம் மற்றும் நபிமொழியையும் கூறலாம்.

﴿ إِنَّ ٱللَّهَ وَمَلَٰٓئِكَتَهُۥ يُصَلُّونَ عَلَى ٱلنَّبِيِّۚ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ صَلُّواْ عَلَيۡهِ وَسَلِّمُواْ تَسۡلِيمًا ﴿٥٦﴾ ﴾، ( سورة الأحزاب، الآية ٥٦).

"இந்த நபியின் மீது அல்லாஹ் அருள் புரிகிறான். மலக்குகளும் அவருக்காக அருளைத் தேடுகின்றனர். மு.:.மின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள்". (அஹ்ஸாப் : 56). மேலும் நபியவர்கள் கூறினார்கள் : நிச்சயமாக பூமியிலே சுற்றித்திரியும் சில வானவர்கள் அல்லாஹ்விடம் உள்ளனர். அவர்கள் எனது சமூகம் எனக்கு

சொல்லும் ஸலாத்தை என்னிடம் எத்திவைப்பர். (நஸாஈ 1282, இது ஸஹீஹான நபிமொழியாகும்.)

எங்கள் நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது ஸலாம் சொல்வது அவர்களின் சமூகத்தின் மீது கடமையாகும். முஸ்லிம் பொதுவாகவோ அல்லது அத்தஹிய்யாத், பள்ளிக்கு நுழைதல், அதிலிருந்து வெளியெறுதல் போன்ற சந்தர்ப்பங்களில் குறிப்பாகவோ ஸலாம் சொல்லுமாறு ஏவப் பட்டுள்ளான். இவ்வாறு ஒருவர் மறைவிலிருக்கும் போது அவருக்கு ஸலாம் சொல்வதானது நபியவர்களுக்கு மாத்திரம் சொந்தமான சிறப்பம்சமாகும். அது வேறுயாருக்குமில்லை. நபியவர்களைத் தவிர ஒரு தனிநபருக்கு அவர் இல்லாத சந்தர்ப்பத்தில் ஸலாம் சொல்வது மார்க்கத்தில் இல்லை. தனது சமூகம் சொல்லும் ஸலாம் எத்திவைக்கப்படுதலும் நபியவர்களின் சிறப்பம்சங்களில் உள்ளதாகும். நபியவர்கள் உயருடனிருக்கும் போது தொலைதூரம் கடந்து செல்லாவிட்டாலும், மரணித்தபின் அவர்களின் மண்ணறைக்கருகில் செல்லாவிட்டாலும் இவ்வாறு ஸலாம் சொல்லும் போது அதற்குரிய சிறப்பை முஸ்லிம் பெற்றுக் கொளகின்றான்.

(4) ஸலாம் என்பதன் பொருள், கெடுதிகள், தீங்குகளை விட்டும் ஈடேற்றமடைதலாகும்.

(5) நபியவர்களுக்கு ஸலாம் சொல்லும் முறைகளானது: (1) அஸ்ஸலாமு அலைக

அய்யுஹந்நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு (2) அஸ்ஸலாமு அலைக யாரஸூலல்லாஹ் (3) அஸ்ஸலாமு அலைக யா நபிய்யல்லாஹ் (4) அஸ்ஸலாமு அலந்நபிய்யி. நாம் ஏற்கனவே கூறிய நபிமொழியின் பிரகாரம், இந்த ஸலாம் வானவர்கள் மூலம் நபியர்களுக்கு சேர்க்கப்படும் என்பதை முஸ்லிம் உறுதிகொள்ள வேண்டும்.

(6) நபியவர்கள் மீது ஸலவாத்தோ ஸலாமோ கூட்டாக சேர்ந்து சொல்லக் கூடாது. ஏனெனில் இந்த முறை அல்குர்ஆன் ஸுன்னா மூலம் ஆதார பூர்வமாக வந்ததல்ல. எனவே தனிப்பட்ட முறையிலேயே நபியவர்கள் மீது ஸலவாதும் ஸலாமும் சொல்ல வேண்டும்.

## நற்கருமங்களுக்கு வலதை முற்படுத்தல்

**٤٩ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: كَانَتْ يَدُ رَسُولِ اللَّهِ ﷺ الْيُمْنَى لِطَهُورِهِ وَطَعَامِهِ، وَكَانَتْ يَدُهُ الْيُسْرَى لِخَلائِهِ، وَمَا كَانَ مِنْ أَذًى".**

(سنن أبي داود، رقم الحديث ٣٣، وصحيح البخاري، رقم الحديث ١٦٨، وصحيح مسلم، رقم الحديث ٦٦ - (٢٦٨)، وجامع

الترمذي، رقم الحديث ١٨٨٨، وسنن ابن ماجه، رقم الحديث ٣٢٨٨، واللفظ لأبي داود، وصححه الألباني).

(49) நபி (ஸல்) அவர்களின் வலதுகை வுழூவிற்கும் உணவுக்கும் பயன்படுத்தப்படக் கூடியதாகவும், இடதுகை மலசலகூடத்தில் சுத்தம் செய்யவும், அறுவருப்பான விடயங்களுக்கும் பயன்படுத்தப்படக் கூடியதாகவும் இருந்தன.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : புஹாரி 168, முஸ்லிம் 268, அபூதாவூத் 33, திர்மிதீ 1888, இப்னுமாஜா.ஃ. 3288. இவ்வார்த்தை அபூதாவூதில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இது இஸ்லாத்தில் பொதுவான விதிமுறையாகும்: ஆடையணிதல், பாதணியணிதல், பள்ளியில் நுழைதல், பல்துலக்குதல், சுர்மா இடுதல், நகம் வெட்டுதல், மீசை கத்தரித்தல், தலைவாருதல், அக்குள் முடிகளை அகற்றல், தலைமுடி சிரைத்தல், தொழுகையில் முதல் ஸலாம் கொடுத்தல், வுழூவின்போது (இரட்டை) உறப்புக்களைக் கழுவுதல், மலசலகூடத்திலிருந்து

வெளியேறுதல், உண்ணல், பருகல், கை குழுக்குதல், ஹஜருல் அஸ்வதை முத்தமிடுதல் போன்ற இன்னோரன்ன நற்கரியங்கள் அனைத்திலும் வலதை முற்படுத்துவது பொது விதியாகும்.

(2) மலசல கூடத்தினுள் நுழைதல், அதிலிருந்து சுத்தம் செய்தல், பள்ளியிலிருந்து வெளியேறுதல், உமிழ்தல், ஆடைகளைக் கலைதல் போன்ற கண்ணியமல்லாத செயற்களுக்கு வலது கையின் கண்ணியத்தைக் கருத்திற்கொண்டு அதனைப் பயன்படுத்தாமல் இடது கையைப் பயன்படுத்துவது விரும்பத்தக்கதாகும்.

(3) நபியவர்களை அனைத்துக் காரியங்களிலும் பின்பற்றுவது முஸ்லிமின் கடமையாகும்.

### அவசியமின்றி மக்களிடம் கையேந்தலாகாது

٥٠ - عَـــنْ أَبِـــي هُرَيْـــرَةَ ﷺ، قَـــالَ : قَـــالَ رَسُـــوْلُ اللهِ ﷺ: "مَـــنْ سَـــأَلَ النَّـــاسَ أَمْـــوَالَهُمْ تَكَثُّـــرًا؛ فَإِنَّمَـــا يَسْـــأَلُ جَمْـــرًا؛ فَلْيَسْتَقِلَّ أَوْ لِيَسْتَكْثِرْ".

(صحيح مسلم، رقم الحديث ١٠٥ - (١٠٤١)،).

(50) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் தமது சொத்துக்களை அதிகரித்துக் கொள்ளும் நோக்கில் மக்களிடம் கேட்டுத் திரிகின்றாரோ அவர் கேட்பது எல்லாம் நெருப்புத் துண்டைத்தான். (விரும்பினால்) அவர் (அதை) குறைத்துக் கொள்ளட்டும் அல்லது அதிகரித்துக் கொள்ளட்டும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 1041.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அவசியமின்றி மக்களிடம் கையேந்துவோருக்கு இந்நபிமொழியில் கடும் எச்சரிக்கை விடுக்கப் பட்டுள்ளது. இவ்வெச்சரிக்கையானது மக்களிடம் அவசியமின்றிக் கையேந்துவது பெரும்பாவங்களில் ஒன்று என்பதற்கான ஆதாரமாகவுள்ளது.

(2) மனிதன் தனது தேவைகளை மக்களிடம் விட்டால் அவை ஒருபோதும் தீரப்போவதில்லை. அவன் எப்போதுமே கேட்டுக்கொண்டேதான் இருப்பான். யார் அல்லாஹ்விடம் பொறுப்புச்சாட்டி விட்டு முயற்சிசெய்தால் அல்லாஹ்வின் உதவியால்

அவனுடைய தேவைகள் நீங்கும். ஏனெனில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான் :

﴿وَمَن يَتَوَكَّلْ عَلَى ٱللَّهِ فَهُوَ حَسْبُهُۥٓ﴾، ( سورة الطلاق، الآية ٣).

"யார் அல்லாஹ்விடம் பொறுப்புச்சாட்டுகிறாரோ அவருக்கு அல்லாஹ் போதுமானவன்". (தலாக்: 3).

### ளுஹாத்தொழுகை

**٥١ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: كَانَ رَسُوْلُ اللَّهِ ﷺ يُصَلِّي الضّحَى أَرْبَعًا، وَيَزِيدُ مَا شَاءَ اللَّهُ.**

(صحيح مسلم، رقم الحديث ٧٩ - (٧١٩)،).

(51) நபி (ஸல்) அவர்கள் ளுஹாத்தொழுகையை நான்கு ரக்அத்கள் தொழுவார்கள். மேலும் அல்லாஹ் நாடியளவு அதிகரித்தக் கொள்வார்கள்.

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 719.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

☞ **ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அவ்வாபீன், ளுஹா, இஷ்ராக் ஆகிய பெயர்கள் கொண்டு இத்தொழுகை அழைக்கப்படுகின்றது. அதன் நேரம் : சூரியன் உதயமாகி ஈட்டிப்பிரமானம் அளவு உயர்ந்து, தொழுகை தடை செய்யப்பட்ட நேரம் தாண்டியதும் ஆரம்பமாகின்றது. சூரியன் உச்சிக்கு வரம்வரை இதன் நேரம் நீடிக்கின்றது.

(2) ளுஹாத்தொழுகையின் குறைந்தபட்ச எண்ணிக்கை 2 ரக்அத்களாகும். அதில் சிறந்தது 4கவும், அதிக பட்ச எண்ணிக்கையாக 8 ரக்அத்களாகவும் உள்ளன. அதிக பட்ச எண்ணிக்கை என்பது இத்தொழுகைக்குக் கிடையாது. முஸ்லிம் விரும்பியவாறு இரண்டிரண்டு ரக்அத்களாக தொழலாம் என்று கூறும் அறிஞர்களும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**வுழூ, ஐவேளைத் தொழுகைகளின் சிறப்பு**

٥٢ - عَـنْ عُثْـمَانَ بْـنِ عَفَّـانَ ﷺ قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللهِ ﷺ: "مَـنْ أَتَـمَّ الْوُضُـوْءَ، كَمَـا أَمَـرَهُ اللّـهُ تَعَـالَى؛ فَالصَّـلَوَاتُ الْمَكْتُوْبَـاتُ، كَفَّارَاتٌ لِمَا بَيْنَهُنَّ".

(صحيح مسلم، رقم الحديث ١١ – ( ٢٣١)،).

(52) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் அல்லாஹ் ஏவியபடி வுழூவைப் பரிபூரணமாகச் செய்கின்றாரோ (அவருடைய) கடமையான தொழுகை அவற்றிற்கிடையே நிகழும் சிறு பாவங்களுக்குப் பரிகாரமாகும்.

அறிவிப்பவர் : உஸ்மான் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 231.

அறிவிப்பாளர் பற்றி 1ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) வுழூ என்பது நிறைய நன்மைகளை அள்ளித் தரும் மகத்தான ஒரு வணக்கமாகும். பாவங்கள் மன்னிக்கப்படவும், பதவிகள் உயர்த்தப்படவும் இது காரணமாகின்றது. இதில் கரிசனையெடுத்து அதன் ஒழுங்குகள், நிபந்தனைகள், அதனை முறிப்பவை ஆகியவற்றை கற்றுக்கொள்வது அவசியமாகும்.

(2) வுழூவைப் பரிபூரணமாகவும் அழகாகவும் செய்து, பின் அமைதியாகவும், உள்ளச்சத்துடனும் தொழுகையை நிறைவேற்ற இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது.

(3) இந்நபிமொழி ஐவேளைத் தொழுகைகளின் சிறப்பையும், அவை பாவங்கள் மன்னிக்கப்படக் காரணமாக அமையும் என்பதனையும் இந்நபிமொழி கூறுகின்றது. எனினும் இப்பாவமன்னிப்பு சுறிய பாவங்களுக்கு மாத்திரமே. பெரிய பாவங்கள் உண்மையான தொளபாவின் மூலம் அதன் நிபந்தனைகளுடன் அமையும் பட்சத்தில் மன்னிக்கப்படும்.

**ஸஹர் உணவில் சிறந்தது பேரீத்தம்பழமே**

٥٣ - **عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ عَـنِ النَّبِـيِّ ﷺ قَـالَ: "نِعْـمَ سُـحُوْرُ الْمُؤْمِنِ: اَلتَّمْرُ".**

(سنن أبي داود، رقم الحديث ٢٣٤٥، وصححه الألباني).

(53) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மு.்.மினுடைய ஸஹர் உணவில் சிறந்தது பேரீத்தம் பழமாகும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 2345. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஸஹர் உணவை அல்லது அதன் ஒரு பகுதியை பேரீத்தம்பழமாக ஆக்கிக்கொள்வது விரும்பத்தக்கது. அதிகமானோர் பராமுகமாக இருக்கும் ஸுன்னாக்களில் இதுவும் ஒன்று. பேரீத்தம்பழம் இப்தாருக்கு மாத்திரம்தான் ஸுன்னத்தென நினைக்கின்றனர்.

(2) பேரீத்தம்பழம் பரகத் செய்யப்பட்ட உணவு. அதனை ஸஹர் உணவுக்கு உட்கொள்வது பரகத்துக்கு மேல் பரகத்தாக அமையும்.

(3) ஸஹர் உணவு உட்கொள்வது எமது கடமைகளை நிறைவேற்ற உதவும். எனவே முஸ்லிம் அதனைத் தொடர்ந்து செய்ய வேண்டும். அது அதிக உணவுப்பதார்த்தங்களின் மூலமும் அமையலாம். குறைவான பதார்த்தங்களின் மூலமும் அமையலாம். ஏன் பேரீத்தம்பழத்தைக் கொண்டு மாத்திரம் கூட அமையலாம். தண்ணீரைக் கொண்டும் அமையலாம். எனினும் பேரீத்தம்பழமே சிறந்தது.

### ஆமீன் சொல்வதன் சிறப்பு

٥٤ - عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ أَنَّ رَسُـوْلَ اللهِ ﷺ قَـالَ: "إِذَا قَـالَ أَحَـدُكُمْ: آمِـينَ، وَقَالَـتِ الْمَلَائِكَـةُ فِـي السَّـمَاءِ: آمِـينَ؛ فَوَافَقَـتْ إِحْدَاهُمَا الْأُخْرَى؛ غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ".

(صحيح البخاري، رقم الحديث ٧٨١، وصحيح مسلم، رقم الحديث ٧٢ - (٤١٠)، واللفظ للبخاري).

(54) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் "ஆமீன்" என்று கூறிய அதே நேரத்தில் வானத்திலிருந்து மலக்குகள் "ஆமீன்" என்று கூறி, இரண்டும் ஒரே நேரத்தில் அமைந்தால் அவருடைய முன்னைய பாவங்கள் மன்னிக்கப்படும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 781, முஸ்லிம் 410.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) பாதிஹா அத்தியாயம் பிரார்த்தனையை உள்ளடக்கியுள்ளதால் அது முடிந்ததும் "ஆமீன்" கூற வேண்டும். ஆமீன் என்பதன் பொருள்: இறைவா! நீ பதிலளி என்பதாகும்.

(2) இமாம், மஃமூம், தனித்துத் தொழுபவர் அனைவரும் தொழுகையில் ஆமீன் சொல்வது விரும்பத்தக்கது என்பதை மேற்கண்ட நபிமொழி அறிவுறுத்துகின்றது.

(3) வானவர்கள் என்று அல்லாஹ்வுடைய படைப்பு உண்டு என்பதை ஈமான் கொள்ளவேண்டும் என இந்நபிமொழி வேண்டிநிற்கின்றது.

### முஸ்லிம்களின் சில பண்புகள்

٥٥ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ عَنْ رَسُوْلِ اللهِ ﷺ قَالَ: "الْمُسْلِمُ مَنْ سَلِمَ النَّاسُ مِنْ لِسَانِهِ وَيَدِهِ، وَالْمُؤْمِنُ مَنْ أَمِنَهُ النَّاسُ عَلَى دِمَائِهِمْ وَأَمْوَالِهِم".

(سنن النسائي، رقم الحديث ٤٩٩٥، و صحيح مسلم، رقم الحديث ٦٥ - (٤١)، ، واللفظ للنسائي، وحسنه الألباني).

(55) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மக்கள் யாருடைய நாவு, கையிலிருந்து ஈடேற்றம் பெறுகின்றனரோ அவரே (பரிபூரண) முஸ்லிமாவார். மேலும் மக்கள் தமது உயர், உடமைகளுக்கு பாதுகாப்புள்ளதாக யாரைக் கருதுகிறாரோ அவர்தான் பரிபூரண முஃமினாவார்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 410, நஸாஈ 4995. இவ்வார்த்தை நஸாஈயில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அமானிதங்களைக் பேணுதல், நடைமுறையில் உண்மையைக் கடைபிடித்தல், மக்களின் உயிர், உடமைகளுக்கு அநீதியிழைக்காமல் பேணுதலாக இருத்தல் போன்றவற்றில் முஸ்லிம் கரிசனை எடுக்க வேண்டும் என்பதை இந்நபிமொழி வேண்டி நிற்கின்றது.

(2) உண்மையான முஸ்லிம் யாரெனில், அல்லாஹ்வுக்கு முழுமையாக சரணடைந்து, மக்களை நோவினைப்படுத்தாமல், அநியாயம் செய்யாமல் அவர்களின் உரிமைகளை சரியான முறையில் கையாண்டு, மக்களும் அவனுடைய கெட்ட நடவக்கையிலிருந்து பாதுகாப்புப் பெறுகின்றார்களே அவன்தான் உண்மையன முஸ்லிமாவான்.

(3) வெளிப்படையான ஒரு விடயத்தை வைத்து ஒரு முஸ்லிமை இந்நபிமொழி வர்ணித்துள்ளது. அதுதான் மக்கள் அவனிடமிருந்து பாதுகாப்புப் பெறுதல். மேலும் உள்ரங்கமான விடயத்தை

வைத்து மு.ஃ.மினை வர்ணித்துள்ளது. அதுதான் மக்கள் தமது உயிர், உடமைகள் விடயத்தில் அவனிடம் அச்சமின்றி இருப்பது.

### வீடுகளை வணக்கங்களின் மூலம் அலங்கரித்தல்

٥٦ - عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ أَنَّ رَسُـولَ اللهِ ﷺ قَـالَ: لاَ تَجْعَلُـوْا بُيُـوْتَكُمْ مَقَـابِرَ؛ إِنَّ الشَّـيْطَانَ يَنْفِـرُ مِـنَ الْبَيْـتِ الَّـذِي تُقْـرَأُ فِيْـهِ سُوْرَةُ الْبَقَرَةِ".

(صحيح مسلم، رقم الحديث ٢١٢ - (٧٨٠)، ).

(56) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்கள் வீடுகளை மண்ணறைகளாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். நிச்சயமாக ஷைத்தான் ஸூரதுல் பகரா ஓதப்படும் வீடுகளிலிருந்து ஓடுகின்றான்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 780.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) வணக்க வழிபாடுகள், திக்ருகள், குறிப்பாக ஸூரதுல் பகரா ஓதுவதன் மூலம் எமது வீடுகளை அலங்கரிப்பதை இந்நபிமொழி அறிவுறுத்தகின்றது. மேலும் ஸூரதுல் பகரா ஓதப்படும் வீட்டிலிருந்து ஷைத்தான் விரண்டோடுகின்றான் என்பதையும் இந்நபிமொழி அறிவிக்கின்றது.

(2) அல்லாஹ்வை வணங்கி, நினைவூட்டி, அவனுக்கு நன்றிசெலுத்துவதை விட்டும் ஒரு முஸ்லிம் தனது வீடுகளைப் பாழாக்கலாகாது. அந்த வீடு சமாதிகளைப் போன்றும் அதில் வசிப்போர் மரணித்தோரைப் போன்றும் ஆகி விடக்கூடாது என்பதற்காகவே மேற்கண்ட வழி முறைகளைக் கடைபிடிக்க வேண்டும்.

**நடுநிலையில் ஓதும் துஆ**

٥٧ - عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ أَنَّ رَسُـوْلَ اللهِ ﷺ قَـالَ: "إِذَا قَـالَ الْإِمَـامُ: سَـمِعَ اللهُ لِمَـنْ حَمِـدَهُ؛ فَقُوْلُـوْا: اَللّٰهُـمَّ رَبَّنَـا لَـكَ الْحَمْـدُ؛ فَإِنَّهُ مَنْ وَافَقَ قَوْلُهُ قَوْلَ الْمَلَائِكَةِ؛ غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ".

(صحيح البخاري، رقم الحديث ٧٩٦، وأيضاً صحيح مسلم، رقم الحديث ٧١ - (٤٠٩)،).

(57) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இமாம் "ஸமிஅல்லாஹு லிமன் ஹமித.ஃ" என்று கூறினால் நீங்கள் "அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து" என கூறுங்கள். ஏனெனில் யாரும் இவ்வாறு கூறும்போது வானவர்களுடைய கூற்றுக்கு ஒத்துப்போகிறாரோ அவருடைய முன்னைய பாவங்கள் மன்னிக்கப்படும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 796, முஸ்லிம் 409.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அல்லாஹ்வின் விசாலத் தன்மையை இந்நபிமொழி எடுத்துக் காட்டுகின்றது. ஏனெனில் சிரமமில்லாத ஒரு விடயத்திற்கு பாவமன்னிப்பு போன்ற மகத்தான கூலியை வழங்குகின்றான். யாருடைய "அல்லாஹும்ம ரப்பனா வலகல் ஹம்து" என்ற வார்த்தை வானவர்களின் அதே கூற்றுடன்

ஒத்துப்பொகின்றதோ அவருடைய முன்பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

(2) தொழுபவர் இமாமாக அல்லது தனித்துத் தொழுபவராக இருந்தால், ருகூ∴விலிருந்து எழும்போது "ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு" என்று கூறியவராக எழுவார். அவர் ம∴மூமாக இருந்தால், இமாம் மேற்கண்ட வார்த்தையைக் கூறியதும், அதையே இவரும் கூறாமல் "அல்லாஹும்ம ரப்பனா வலகல் ஹம்து" என்ற கூற்றை மொழிவார். "ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு" என்பதன் பொருள் : அல்லாஹ் தன்னைப் புகழ்வதை செவிமடுத்து (ஏற்றுக் கொண்டு) விட்டான் என்பதாகும்.

### ரமழான் மாத்தத்தை அறிவது எவ்வாறு?

**٥٨ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ قَالَ: ذَكَرَ رَسُوْلُ اللهِ ﷺ اَلْهِلاَلَ؛ فَقَالَ: "إِذَا رَأَيْتُمُوْهُ فَصُوْمُوْا، وَإِذَا رَأَيْتُمُوْهُ؛ فَأَفْطِرُوا؛ فَإِنْ أُغْمِيَ عَلَيْكُمْ فَعُدُّوْا ثَلَاثِيْنَ".**

(صحيح مسلم، رقم الحديث ٢٠ - (١٠٨١)، ).

(58) நபி (ஸல்) அவர்கள் பிறைபற்றிக் கூறும்போது : அதைக்கண்டால் நீங்கள் நோன்பு பிடியுங்கள்.

(மீண்டும்) அதைக் கண்டே நோன்பை விடுங்கள். அது உங்களுக்கு மறைக்கப்பட்டால் (நடப்பு மாதத்தை) 30 ஆக பூர்த்தி செய்யுங்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 1081.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) சந்தேகத்திற்கிடமான நாளில் நோன்பு நோற்பதும், ஷஃபான் 30ம் நாள் மேகமூட்டமாக இருந்தால் அந்நாளை ரமழானாகக் கணித்து நோன்பு நோற்பதும் கூடாது என்பதை இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது.

(2) ரமழான் மாதம் ஆரம்பிக்க முன் அதில் நோன்பு நோற்பது கடமையாகாது. நேரடியாகப் பிறை காணும்போது அல்லது கண்டவர் சாட்சி சொல்லும்போது ரமழான் மாதம் நுழைந்து விட்டதாக அறியப்படும். ஷஃபான் 30ம் நாள் பிறை தென்படாமல் மேகமூட்டங்கள் இருந்தால் ஷஃபானை 30கப் பூர்த்தி செய்ய வேண்டும்.

## சபையில் பேணவேண்டிய ஒழுக்கங்கள்

٥٩ - عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ، عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "إِذَا قَامَ أَحَدُكُمْ عَنْ مَجْلِسِهِ، ثُمَّ رَجَعَ إِلَيْهِ؛ فَهُوَ أَحَقُّ بِهِ".

(سنن ابن ماجه، رقم الحديث ٣٧١٧، وصحيح مسلم، رقم الحديث٣١ - (٢١٧٩) واللفظ لابن ماجه، وصححه الألباني).

(59) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் (சபையில்) தனது இருப்பிடத்தில் இருந்து எழுந்து சென்று மீண்டும் திரும்பினால் அதே இடத்திற்கு அவரே மிகவும் தகுதியானவர்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2179, இப்னு மாஜா∴. 3717. இவ்வார்த்தை இப்னு மாஜா∴வில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) சபையின் ஒழுக்கங்களைப் பேணுவது முஸ்லிமுக்கு அவசியமாகும். மற்றவர்களுக்கு இடர் விளைவிக்கும் வகையில் நடந்துகொள்ளக் கூடாது.

(2) உட்கார்ந்திருக்கம் ஒருவர் (சபையில்) தனது இருப்பிடத்தில் இருந்து வுழூ அல்லது வேறு தேவைக்காக எழுந்து சென்று மீண்டும் திரும்பினால் அதே இடத்திற்கு அவரே மிகவும் தகுதியானவர்.

## குடும்பத்திற்கு செலவளித்தல்

**٦٠ - عَــنْ أَبِــيْ مَسْــعُوْدٍ الْبَــدْرِيِّ ﷺ عَــنِ النَّبِــيِّ ﷺ، قَــالَ: "إِنَّ الْمُسْــلِمَ إِذَا أَنْفَــقَ عَلَــى أَهْلِــهِ نَفَقَــةً وَهُــوَ يَحْتَسِــبُهَا كَانَــتْ لَــهُ صَدَقَةً".**

(صحيح مسلم، رقم الحديث ٤٨ - (١٠٠٢)، وصحيح البخاري، رقم الحديث ٥٥، واللفظ لمسلم).

(60) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக முஸ்லிம் (அல்லாஹ்விடத்தில்) நன்மையை

எதிர்பார்த்தவராக தனது குடும்பத்திற்கு செலவு செய்கின்றாரோ அது தர்மமாக அமையும்.

அறிவிப்பவர் : அபூ மஸ்ஊத் அல்பத்ரீ (ரலி).

ஆதாரம் : புஹாரி 55, முஸ்லிம் 1002. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 2ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மனைவி, பிள்ளைகளுக்கு செலவளிப்பதன் சிறப்பை இந்நபிமொழி எடுத்துக்காட்டுகின்றது. அது அல்லாஹ்வின் பாதையிலோ, ஏழைகளுக்கோ செலவளிப்பதை விட சிறப்பானது. ஏனெனில் மனைவி, பிள்ளைகளுக்கு செலவளிப்பது கடமையாகும். ஏனையோருக்கு செலவளிப்பது கடமையில்லை. கடமையில்லாத ஒன்றை செய்வதை விட கடமையான ஒன்றை செய்வதே மேலானது.

(2) இவ்வாறு செலவளிப்பதன் மூலம் நன்மையை எதிர்பார்ப்பது எப்படியெனில், இது தனக்குக் கடமையான ஒன்று என்பதை முஸ்லிம் நினைவு கூர்ந்து அதனை அல்லாஹ்வுக்காக செலவளித்தால் அவனிடத்தில் மகத்தான கூலியைப் பெற்றுத்தரும். ஏனோ செலவளிக்க வேண்டும் என்பதற்காக

செலவளித்தால் அதனால் அவனுக்கு எந்த நன்மையும் கிடைக்காது.

(3) செலவளிப்பது என்பது நன்மையான மற்றும் அனுமதிக்கப்பட்ட விடயங்களில் ஹலாலான வழியில் சம்பாதித்த பணத்தை வழங்குவதாகும்.

### நரகத்திலிருந்து பாதுகாப்பெடுத்தல்

**٦١ -عَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ ﷺ، قَالَ: سَمِعْتُ النَّبِيَّ ﷺ، يَقُولُ: "مَنِ اسْتَطَاعَ مِنْكُمْ أَنْ يَسْتَتِرَ مِنَ النَّارِ، وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ؛ فَلْيَفْعَلْ".**

(صحيح مسلم، رقم الحديث ٦٦ - (١٠١٦)، وصحيح البخاري، رقم الحديث ١٤١٣، واللفظ لمسلم).

(61) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு பேரீத்தம் பழத்துண்டை தர்மம் செய்தாயினும் உங்களில் ஒருவர் நரகிலிருந்து தன்னைப் பாதுகாக்க சக்திபெற்றால் அவ்வாறு செய்து கொள்ளட்டும்.

அறிவிப்பவர் : அத்ய் பின் ஹாதம் (ரலி).

ஆதாரம் : புஹாரி 1413, முஸ்லிம் 1016. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ தரீப், அபூ வஹ்ப் ஆகிய இரு புனைப்பெயர் கொண்டழைக்கப்பட்ட அத்ய் பின் ஹாதிம் பின் அப்தில்லாஹ் அத்தாஈய் கொடைவள்ளலான அறிவாளியான ஒரு நபித்தோழராவார். தய்யி∴ என்ற தனது கோத்திரத்திற்கு ஜாஹிலிய்யத்திலும், இஸ்லாத்திலும் தலைவராக இருந்த இவர், மதிப்புக்குரியவராகவும், இரக்கமுள்ளவராகவும், திடீரென எழுந்து பேசக்கூடிய அளவு திறமைமிக்க பேச்சாளராகவும் இருந்தார்கள்.

நபியவர்கள் தனக்கு உதவியாக இருக்க வேண்டுமென்பதற்காக இவர் இஸ்லாத்தில் நுழைய வேண்டுமென்று எதிர்பார்த்தார்கள். ஹிஜ்ரி 7ம் ஆண்டு நபியவர்களை சந்திக்க வந்தார்கள். இவர் வந்த நோக்கம் நபியவர்களைப் பற்றி அறியவே தவிர, இஸ்லாத்தை ஏற்கும் நோக்கம் இருக்க வில்லை. மதீனாவுக்கு வந்ததும் நபியவர்களை

பள்ளியில் வைத்து சந்தித்ததார்கள். நபியவர்கள் மன்னர் என்றோ தலைவர் என்றோ அழைக்கப் படாததைப் பார்த்து, இவர் ஆட்சியதிகாரங்களுக்கு ஆசைப்படுபவர்களல்ல என்பதை (அத்ய்) புரிந்து கொண்டார். நபியவர்கள் இவரை தனது வீட்டுக்கு அழைத்து கண்ணியப்படுத்தி, உபசரித்தார்கள். மேலும் இஸ்லாத்தின்பால் அழைத்தார்கள். அவரும் இஸ்லாத்தில் நுழைந்து அழகிய முறையில் அதனைக் கடைபிடித்தார்கள். (அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட) முர்தத்துகளுடனான போர்களில் இவருக்கு மகத்தான பங்களிப்புண்டு. ஏனெனில் இவரும் இஸ்லாத்தில் உறுதியாக நின்று, இவருடைய கூட்டத்தினரையும் மதம் மாறவிடாமல் தடுத்தார்கள். அதேபோன்று இஸ்லாத்தின் பல வெற்றிகளில் இவருக்கு பெரிய பங்களிப்புண்டு. இராக், மதாஇன், காதிஸிய்யா மற்றும் பல போர்களில் கலந்து கொண்டார்கள்.

உமர் (ரலி) அவர்கள் இவரைப் புகழ்ந்துள்ளார்கள், அத்ய் பின் ஹாதிம் கூறுகின்றார்: நான் ஒரு கூட்டத்துடன் உமர் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது உமர் அவர்கள் ஒவ்வொருவருடைய பெயரைச் சொல்லி அழைக்கலானார்கள். அமீருல் முஃமினீனே என்னைத் தெரியவில்லையா? எனக் கேட்டேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள் : ஆம், தெரியும். இவர்கள் மறுத்த போது நீர் இஸ்லாத்தில் இணைந்தீர். இவர்கள் பின்வாங்கிய நேரத்தில் நீர்

முன்னோக்கி வந்தீர். இவர்கள் ஏமாற்றியபோது நீர் நிறைவேற்றினீர். இவர்கள் அறியாதபோது நீங்கள் அறிந்து ஏற்றுக் கொண்டீர். அப்படியென்றால் (என்னைப் பற்றி இவ்வளவு அறிந்து வைத்துள்ள நீங்கள் என்னைக்கான யாரை முற்படுத்தினாலும்) நான் பொருட்படுத்தமாட்டேன். (புஹாரி 4394, முஸ்லிம் 2523).

மேலும் அத்ய் கூறிகின்றார் : நான் உமர் (ரலி) அவர்களிடம் வந்தேன். அப்போது என்னிடம் கூறினார்கள் : நபியவர்களையும், தோழர்களையும் மகிழ்ச்சிப்படுத்திய முதலாவது தர்மம் தைய்யி∴ கோத்திரத்திலிருந்து நீர் சேர்த்து, நபிகளாரிடம் கொண்டு வந்த தர்மமாகும். (முஸ்லிம் 2523).

பின்பு அத்ய் பின் ஹாதிம் அவர்கள் கூபாவுக்கு வந்து அலீ (ரலி) அவர்களுக்கு பக்கபலமாக இருந்தார்கள். இவர் அறிவித்த நபிமொழிகள் 66 ஆகும். இவர்கள் நீண்டகாலம் வாழ்ந்தார்கள். ஹிஜ்ரி 67ம் ஆண்டு தனது 120வது வயதில் மரணித்தார்கள். இதைவிட அதிகம் வாழ்ந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இந்நபிமொழி தர்மத்தைத் தூண்டுகின்றது. குறைவாக இருக்கின்றதே என்று தவிர்ந்து கொள்ளக் கூடாது. ஏனெனில் குறைவான தர்மம் கூட நரகிலிருந்து பாதுகாப்புப் பெற்றுத்தரும்.

(2) நரகத்தை அஞ்சிக் கொள்ளுங்கள் என்பதன் விளக்கம் என்னவெனில், உங்களுக்கும் நரகத்திற்குமிடையில் தர்மத்தின் மூலம் ஒரு தடுப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அது ஒரு சிறு பேரீத்தம்பழத் துண்டாயினும் சரியே. ஏனெனில் அதுகூட மக்களுக்குப் பயனளிக்கும். ஒரு சிறு பிள்ளையின் தீராத பட்டினியை சிலவேளை இது அடைக்கும். எனவே அதைச் சிறிதாகக் கருதக் கூடாது. பாவங்கள் மன்னிக்கப் படுவதையே நரகத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்ற கூற்றின் மூலம் நாடப்பட்டிருக்கின்றது.

(3) ஏனைய உணவுப் பண்டங்களை விட்டு, பேரீத்தம்பழத்தை மாத்திரம் கூறக் காரணம் அதுவே அன்றைய காலத்தின் பிரதான உணவாக இருந்தது.

(4) சுவனத்தில் நுழையவும், நரகிலிருந்து பாதுகாப்புப் பெறவும் நிறைய வழிகள் உள்ளன. மக்கள் தேவைகளைப் பூர்த்தி செய்தல், ஒரு சிறு பொருளையாயினும் அவர்களுக்கு தர்மம் கொடுத்தல் போன்றன இவற்றிலடங்கும். இது அல்லாஹ் மக்களுக்கு வழங்கியுள்ள வெகுமதியாகும். எனினும் மக்களில் அதிகமானோர் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவதில்லை.

## ஹஜ், உம்ராவின் சிறப்பு

٦٢ -عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ أَنَّ رَسُـوْلَ اللهِ ﷺ قَـالَ: "الْعُمْـرَةُ إِلَـى الْعُمْـرَةِ كَفَّـارَةٌ لِمَـا بَيْنَهُمَـا ، وَالْحَـجُّ الْمَبْـرُوْرُ لَـيْسَ لَـهُ جَـزَاءٌ إِلاَّ الْجَنَّةُ".

(صحيح البخاري، رقم الحديث ١٧٧٣، وأيضاً صحيح مسلم، رقم الحديث ٤٣٧ - (١٣٤٩)، واللفظ للبخاري).

(62) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு உம்ராவிலிருந்து மறுஉம்ரா வரை அவ்விரண்டிற்கும் இடையில் ஏற்பட்ட (சிறு) பாவங்களுக்கான பரிகாரமாகும். ஒப்புக்கொள்ளப்பட்ட ஹஜ்ஜானது அதற்கு சுவனத்தைத் தவிர வேறு கூலியில்லை.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 1773, முஸ்லிம் 1349. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இரு உம்ராக்களுக்கிடையில் உள்ள பாவங்கள் மன்னிக்கப்படும் பொருட்டு அதிகம் உம்ராக்கள் செய்வது விரும்பத்தக்கது என்பதை இந்நபிமொழி எடுத்துக்காட்டுகின்றது. இந்நபிமொழியில் கூறப்

பட்டுள்ள பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன என்பதன் கருத்து சிறுபாவங்கள் மாத்திரமே. பெரும் பாவங்களைப் பொருத்தவரையில் அதற்காக உண்மையான தௌபா அதன் நிபந்தனைகளுடன் செய்யும் வரை மன்னிக்கப்பட மாட்டாது.

(2) ஹஜ் மற்றும் உம்ராவின் மகத்தான சிறப்பை இந்நபிமொழி எடுத்துரைக்கின்றது. இன்னும் ஓர் உம்ராவிலிருந்து மறுஉம்ரா வரை அவ்விரண்டிற்கும் இடையில் ஏற்பட்ட (சிறு) பாவங்களுக்கான பரிகாரமாகும். ஒப்புக்கொள்ளப்பட்ட ஹஜ்ஜானது அதற்கு சுவனத்தைத் தவிர வேறு கூலியில்லை.

(3) ஒப்புக்கொள்ளப்பட்ட ஹஜ் என்பது, அதன் முழுமையான சட்டதிட்டங்கள் பேணப்பட்டு, எவ்வாறு நிறைவேற்றுமாரு வேண்டப்பட்டுள்ளானோ அவ்வாறே பரிபூரணமாக நிறைவேற்றப்படும் ஹஜ்ஜே ஏற்றுக்கொள்ளப்பட்ட ஹஜ்.

### ரமழான் மாதத்தின் சிறப்பு

**٦٣ - عَـنْ أَبِـي هُرَيْـرَةَ ﷺ يَقُـوْلُ: قَـالَ رَسُـولُ اللّـهِ ﷺ: "إِذَا دَخَـلَ رَمَضَـانُ فُتِّحَـتْ أَبْـوَابُ الْجَنَّـةِ، وَغُلِّقَـتْ أَبْـوَابُ جَهَـنَّمَ، وَسُلْسِـلَتِ الشَّيَاطِيْنُ".**

(صحيح البخاري، رقم الحديث ٣٢٧٧، وصحيح مسلم، رقم الحديث ١ - (١٠٧٩)، واللفظ للبخاري).

(63) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ரமழான் மாதம் வந்துவிட்டால் சுவனத்தின் வாயில்கள் திறக்கப்படும். நரகின் வாயில்கள் மூடப்படும். ஷைத்தான்கள் விலங்கிடப்படுவர்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 3277, முஸ்லிம் 1079. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) சுவனவாயில்கள் திறக்கப்படுவதும், நரக வாயில்கள் மூடப்படுவதும் ரமழான் மாதத்திற்கான மகத்தான சிறப்புக்களில் ஒன்றாகும். நரகிலிருந்து பாதுகாப்புப் பெற்று, சுவனம் நுழைய விரும்பும் அனைவரும் இம்மாதத்தில் உற்சாகத்துடனும், உளத்தூய்மையுடனும் நல்லமல்களின்பால் விரைய வேண்டும்.

(2) ஷைத்தானை விலங்கிடுவதென்பது யதார்த்தமாக நடக்கும் ஒரு விடயமே. அதனால்

எந்தவித கெடுதிகளோ பாவங்களோ நடைபெற மாட்டாது என்பதல்ல. ஏனெனில் பாவங்களுக்கு ஷைத்தான்களல்லாத காரணிகளும் உண்டு. கெட்ட உள்ளங்கள், தீய பழக்கமுறைகள், மனித ஷைத்தான்கள் போன்றனவும் பாவங்கள் நடைபெறக் காரணமாகின்றன.

(3) சுவனவாயில்கள் திறக்கப்படுவதும், நரக வாயில்கள் மூடப்படுவதும், ஷைத்தான்கள் விலங்கிடப்படுவதும் ரமழான் மாதத்தை கண்ணியப்படுத்துவதற்கான அடையாளங்களாகும். நல்லடியார்களைத் துன்புறுத்தாமலிருக்கவும், அவர்களுக்கு மத்தியில் கருத்து வேற்றுமைகள் குழப்பங்களைப் போடமலும் இருக்கவே விலங்கிடப்படுவது நடைபெறுகின்றது.

## கடமையான நோன்பில் இரவில் நிய்யத் வைக்க வேண்டும்

٦٤ - عَـنْ حَفْصَـةَ رَضِـيَ اللهُ عَنْهَـا زَوْجِ النَّبِـيِّ ﷺ عَـنِ النَّبِـيِّ ﷺ قَالَ: "مَنْ لَمْ يُجْمِعِ الصِّيَامَ قَبْلَ الْفَجْرِ؛ فَلاَ صِيَامَ لَهُ".

(جامع الترمذي، رقم الحديث ٧٣٠، وسنن أبي داود، رقم الحديث ٢٤٥٤، وسنن النسائي، رقم الحديث ٢٣٣٤ ، واللفظ للترمذي، وصححه الألباني).

(64) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் இரவிலேயே நோன்பு பிடிக்க உறுதிகொள்ள வில்லையோ அவருடைய நோன்பு செல்லுபடியாகாது.

அறிவிப்பவர் : ஹப்ஸா (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 2454, திர்மிதீ 730, நஸாஈ 2334. இவ்வார்த்தை திர்மிதீயில் இருந்து பெறப்பட்டது. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளார்.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அமீருல் மு.்.மினீன் உமர் பின் கத்தாப் (ரலி) அவர்களின் செல்வப்புதல்வி ஹப்ஸா (ரலி) அவர்கள் நபித்துவத்திற்கு 5 ஆண்டுகள் முன்னர் பிறந்தார்கள். எத்யோப்பியாவுக்கு ஹிஜ்ரத் செய்து பின் மதீனாவுக்கு ஹப்ஸாவுடனேயே ஹிஜ்ரத் செய்த குனைஸ் பின் ஹுதாபா அஸ்ஸுஹமீ அல்பத்ரீ என்பவருக்கு மனைவியாக இருந்தார்கள். இவர் பத்ர் மற்றும் உஹத் போரில் கலந்து கொண்டார்கள். அதில் அவருக்குக் காயம் ஏற்பட்டு

அதன் காரணமாகவே அன்னை ஹப்ஸாவை விட்டு மரணித்தார்கள். அப்போது அன்னையருக்கு வயது 20 மாத்திரம்தான். வாலிபவயதிலேயே விதவையாகி விட்ட தனது மகளைப் பார்த்து உமர் (ரலி) அவர்கள் மிகவும் கவலைப்பட்டார்கள். தனது மகள் விதவை என்ற தனிமையில் கஷ்டப்படுவதைக் காணும்போதெல்லாம் உமர் (ரலி) அவர்கள் தனது வாழ்கையே வெறுப்பது போன்று உணர்ந்தார்கள். இந்த ஹப்ஸா (ரலி) தனது கணவருடன் வாழும் போது மகிழ்ச்சியான குடும்ப வாழ்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். இவர்களுடைய இத்தாக்காலம் முடிந்ததும் மறுமணம் செய்து வைப்பதில் சிந்திக்கலானார்கள். நபியவர்கள் இவர்களைப் பெண்கேட்டு அனுப்பினார்கள். உமர் (ரலி) அவர்களும் மனப்பூர்வமாக நபியவர்களுக்கு தனது மகள் ஹப்ஸாவைத் திருமணம் செய்து வைத்தார்கள். அதன் மூலம் ஹி.3ம் ஆண்டு நபியவர்களுடைய உறவினராகும் பாக்கியத்தைப் பெற்றார்கள். ஹப்ஸா(ரலி) அறிவித்த நபிமொழிகள் 60 ஆகும்.

அல்குர்ஆனைத் திறன்பட ஓதும் அதிகமான காரிமார்கள் மரணித்த வேலை, அபூபக்ர் (ரலி) அவர்களால் தொகுக்கப்பட்ட இஸ்லாத்தின் முதல் அல்குர்ஆன் பிரதியை (உமர் (ரலி) அவர்களுக்குப் பின்) பாதுகாக்க ஹப்ஸா (ரலி) அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதே இவர்களுக்குக் கிடைத்த மாபெரும் சிறப்பம்சமாகும். ஏனெனில் இவர்கள்

எழுத்தறிவுள்ள ஒரு பெண்ணாக இருந்தார்கள். அதனால் இவர்கள் அப்பிரதியைப் பாதுகாக்கக் கூடியவராகத் திகழ்ந்தார்கள். உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலம் வரும்வரை இவர்களிடம் அப்பிரதி இருந்துவந்தது. மக்களனைவரையும் ஒரே கிராஅத்தின் கீழ் ஒன்று சேர்க்கும் பொருட்டு, பிரதி பண்ணுவதற்காக உஸ்மான் (ரலி) அவர்கள் ஹப்ஸாவிடம் மூலப்பிரதியைப் பெற்று, பிரதி பண்ணிவிட்டு திருப்பிக் கொடுத்தார்கள். அவர்கள் மரணிக்கும் வரை அவர்களிடமேயே அல்குர்ஆனின் மூலப்பிரதி இருந்தது. அதன்பின் தனது சகோதரர் அப்துல்லாஹ் பின் உமர் அவர்களிடம் ஒப்படைக்குமாறு மரணத்தின் போது வஸிய்யத் செய்தார்கள்.

ஹப்ஸா (ரலி) அவர்கள் மரணிக்கும் வரை இரவை குர்ஆன் ஓதல், திக்ரு, ஏனைய வணக்கங்களின் மூலம் உயிர்ப்பிக்கக் கூடியவராக இருந்தார்கள். ஹி.41 அல்லது 45ல் மதீனாவில் மரணித்தார்கள். அப்போதைய மதீனா கவர்னர் மர்வான் இவர்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ரமழான் நோன்பு, கழா நோன்பு, நேர்ச்சை, பரிகார நோன்பு போன்ற கடமையான நோன்புகளுக்கு இரவிலேயே (பஜ்ருக்கு முன்னால்) நிய்யத் வைப்பது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

நிய்யத்தின்இடம் உள்ளமாகும். அதனை வாயினால் மொழிதலாகாது.

(2) கடமையான நோன்பில் பகல் முழுவதும் நிய்யத்திற்குட்பட்டதாக இருக்க வேண்டுமென இந்நபிமொழி எடுத்துரைக்கின்றது. அதாவது பகல் ஆரம்பிக்க முன்னர் இரவிலே நிய்யத் வைக்காமல் ஒருவர் நோன்பாளியாக மாட்டார். கடமையில்லாத மேலதிக நோன்புகளில் பஜ்ருக்குப் பின் ஏதும் உட்கொள்ளாமலிருப்பின் பகல்பொழுதிலும் (சூரியன் உச்சிக்கு வரும்வரை) நிய்யத் வைத்துக் கொள்ளலாம்.

**பஜ்ரு தொழுகையில் ஓதும் அளவு**

**٦٥ - عَنْ أَبِي بَرْزَةَ ﷺ قَالَ: كَانَ رَسُوْلُ اللهِ ﷺ يَقْرَأُ فِي الْغَدَاةِ مَا بَيْنَ السِتِّيْنَ إِلَى الْمِائَةِ آيَةً.**

(صحيح مسلم، رقم الحديث ١٧٢ - (٤٦١)، وصحيح البخاري، رقم الحديث ٥٤١، واللفظ لمسلم).

(65) நபி (ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுகையில் 60 முதல் 100 வசனங்கள் வரை ஓதுவார்கள்.

அறிவிப்பவர் : அபூ பர்ஸா.ஃ. (ரலி).

ஆதாரம் : புஹாரி 541, முஸ்லிம் 461. இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

**✐ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ பர்ஸா நழ்லா.ஃ. பின் உபைத் அல்அஸ்லமீ (வலுவான கருத்தின் பிரகாரம் இதுவே இவருடைய பெயர்) (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் மக்கா வெற்றியில் கலந்து கொண்டார்கள். பின்பு பஸராவுக்குச் சென்று, அங்கிருந்து குராஸான் (ஆப்கானிஸ்தான்) சென்று "மர்வு" என்ற ஊரில் இருந்து விட்டு, மீண்டும் பஸராவுக்கே வந்தார்கள். நபியவர்களைத் தொட்டும் 40 பொன்மொழிகள் அறிவித்துள்ளார்கள்.

முஆவியா (ரலி) அவர்கள் மரணிக்க முன் ஹி.60ல் பஸராவில் அபூ பர்ஸா (ரலி) அவர்கள் மரணித்தார்கள். ஹி.64ல் மரணித்ததாகவும் கூறப் படுகின்றது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நபி (ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுகையில் (காலைத் தொழுகை) 60 முதல் 100 வசனங்கள் வரை சில சமயங்களில் ஓதுவார்கள்.

(2) கூட்டதிலிருக்கும் மிக பலவீனமானவரை வைத்தே கூட்டுத்தொழுகை அமையவேண்டும். கடமையான தொழுகை சில வசனங்களைக் கொண்டே நிறைவேறிவிடும் என்றிருக்கும் போது, வேண்டுமென்றே பலவீனரை நோவினை செய்யவோ, நீண்ட நேரம் நிற்பதன் மூலம் தொழுகையாளிகளை சோர்வடையச் செய்யவோ அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையும் கிடையாது. ஒருவரிடமிருந்தோ அல்லது பலரிடமிருந்தோ பலவீனம், சடைவு, சோர்வு ஏற்படுவதைப் பயந்து, நீண்ட நேரம் தொழும் ஜமாஅத்தை விட குறைந்த நேரம் தொழும் ஜமாஅத்திற்கு சிறப்புக்கள் வந்துள்ளன.

(3) மக்களை ஒன்றுசேர்த்து, அவர்களின் உள்ளங்களை அனுகி, கைகளைப் பிடித்து படிப் படியாகத்தான் ஸுன்னாவின் பக்கம் அவர்களைக் கொண்டுசெல்ல வேண்டும். இது ஒரேஅடியாக அவர்களை விரண்டோடச் செய்வதை விட சிறந்தது. பள்ளிகளுடைய நிலமைகள் வேறுபடக்கூடியது. தொழக்கூடியவர்களுக்கு மத்தியில் வேறுபாடுகள் இருப்பதால், நீட்டித் தொழுவது ஒரு மஸ்ஜிதுக்குப் பொருந்தும், இன்னொரு மஸ்ஜிதுக்குப் பொருந்தாது. ஓவ்வொரு இமாமும் அவர் இமாமத் செய்யும் பள்ளி நிலவரங்களைக் கருத்திற்கொள்ள வேண்டும். ஓதும் போது சடைவடையும் வரை நீட்டவும் கூடாது, குறை ஏற்படுமளவு சுருக்கவும் கூடாது.

**ஸுஜூது செய்வதன் சிறப்பு**

**٦٦ -عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "تأكُلُ النَّارُ ابْنَ آدَمَ إِلاَّ أَثَرَ السُّجُوْدِ؛ حَرَّمَ اللَّهُ عَلَى النَّارِ أَنْ تَأْكُلَ أَثَرَ السُّجُوْدِ".**

(سنن ابن ماجه، رقم الحديث ٤٣٢٦، وصحيح البخاري، جزء من رقم الحديث ٧٤٣٧، وصحيح مسلم، جزء من رقم الحديث ٢٩٩ - (١٨٢)، واللفظ لابن ماجه، وصححه الألباني).

(66) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஸுஜூது செய்த இடத்தைத் தவிர மனித உடம்பின் அனைத்துப் பகுதியையும் நரகநெருப்பு எரிக்கும். ஸுஜூதின் அடையாளத்தை எரிக்க அல்லாஹ் நரகநெருப்பிற்குத் தடை விதித்துள்ளான்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 7437, முஸ்லிம் 182, இப்னுமாஜா 4326. இவ்வார்த்தை இப்னுமாஜாவில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) இந்நபிமொழியில் அல்லாஹ்வுக்கு ஸஜ்தாச் செய்வதன் சிறப்பிற்கு ஆதாரமுள்ளது. ஏனெனில் ஸுஜூது செய்த இடங்களைத் தவிர மனித உடம்பில் ஏனைய பகுதிகளை நரகம் எரிக்கும். அவை: மூக்குடன் சேர்த்து நெற்றி, இரு உள்ளங்கைகள், இரு முழங்கால்கள், இரு பாதங்கள் ஆகியனவாகும். ஏனெனில் அவ்வுறுப்புக்களை அல்லாஹ் நரகிற்கு ஹராமாக்கியுள்ளான். நரகம் அல்லாஹ் ஏவியதைத் தவிர எரிக்கமாட்டாது.

(2) அல்லாஹ் அவனது நல்லடியார்களை கண்ணியப்படுத்தி, அவர்களுக்கு அவனை வணங்கி வழிப்படும் பாக்கியத்தையும் கொடுத்து, சுவனத்திற்குச் செல்லும் பாதையையும் அமைத்துக் கொடுத்துள்ளான். மேலும் அவர்களின் அழகு, பிரகாசத்தின் மூலம் ஏனையோரை விட்டும் பிரித்துக்காட்டியுள்ளான். இந்தப் பிரகாசம் மறுமையில் அவர்களுடைய ஸுஜூது செய்த உறுப்புக்களில் இருக்கம். அல்லாஹ்வுக்கு ஸுஜூது செய்வதன் சிறப்புக்களில் இதுவும் ஒன்று.

### பெருநாள்த் தொழுகையில் பாதைமாற்றிப் போதல்

٦٧ - **عَنْ جَابِرٍ ﷺ قَالَ: كَانَ النَّبِيُّ ﷺ، إِذَا كَانَ يَوْمُ عِيدٍ، خَالَفَ الطَّرِيقَ.**

(صحيح البخاري، رقم الحديث ٩٨٦).

(67) நபி (ஸல்) அவர்கள் பெருநாள் தினத்தில் (தொழுகைக்காக) ஒரு பாதையால் சென்று இன்னொரு பாதையால் திரும்புவார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி).

ஆதாரம் : புஹாரி 986.

அறிவிப்பாளர் பற்றி 32ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) (இரு பெருநாள்த் தொழுகைகளில்) போகும் போது ஒரு பாதையாலும் வரும்போது மற்றோர் பதையாலும் வருதலானது, அல்லாஹ்விடம் இரு பாதைகளும் மறுமையில் சாட்சிசொல்வதற்காக வேண்டியிருக்கலாம். ஏனெனில் மறுமையில் பூமி அதன் மேல் செய்யப்பட்ட அனைத்து நன்மை, தீமைபற்றியும் சொல்லும் என்பது குறிப்பிடத்தக்கது.

(2) நபி (ஸல்) அவர்களின் சில செயற்களுக்கு காரணம் புரியாவிட்டாலும், நபியவர்களை அனைத்துக் காரியங்களிலும் முடியுமானவரை பின்பற்றுவது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

**தொழுகையின் திறவுகோல் வுழூவே**

**٦٨ - عَـنْ عَلِـيٍّ ﷺ قَـالَ: قَـالَ رَسُـولُ اللَّـهِ ﷺ: "مِفْتَـاحُ الصَّـلاَةِ الطُّهُوْرُ، وَتَحْرِيْمُهَا التَّكْبِيرُ، وَتَحْلِيلُهَا التَّسْلِيْمُ".**

(سنن أبي داود، رقم الحديث ٦١، وجامع الترمذي، رقم الحديث ٣، وسنن ابن ماجه، رقم الحديث ٢٧٥، قَالَ الإمام الترمذي: هذا حديث بأنه: أصح شيء في هذا الباب أحسن، وحسنه الألباني وصححه).

(68) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : தொழுகையின் திறவுகோல் வுழூவாகும். அதன் ஆரம்பம் தக்பீராகும். அதன் முடிவு ஸலாம் கொடுத்தலாம்.

அறிவிப்பவர் : அலீ (ரலி).

ஆதாரம் : அபூ தாவூத் 61, திர்மிதீ 3, இப்னு மாஜா.'. 275. இமாம் திர்மிதீ இந்நபிமொழிதான் இவ்விடயத்தில் வந்துள்ள மிகத்தரம் வாய்ந்த நபிமொழி எனக் கூறியுள்ளார்கள். அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஹஸன் ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளார்.

☞ **அறிவிப்பாளர் பற்றி :**

அபுல் ஹஸன் என்ற புனைப்பெயருடைய அலீ பின் அபீதாலிப் பின் அப்தில் முத்தலிப் அல் ஹாஷிமீ அல் குரஷீ ஹிஜ்ரத்திற்கு முன் 23ம் ஆண்டு ரஜப் 13ம் நாள் (கி. பி. 599-3-17) பிறந்தார்கள். இவர் நபியவர்களின் சிறிய தந்தையின் மகன் என்ற முறையில் சகோதரராகவும், (மகளை மணந்தவர் என்ற முறையில்) மருமகனாகவும் உள்ளார். சிறுவர்களில் முதலில் இஸ்லாத்தைத் தழுவிய வரும் இவரே. அல்லாஹ் நபியவர்களுக்கு மதீனா நோக்கி ஹிஜ்ரத் செல்ல அனுமதித்த போது தன்னைத் தியாகஞ்செய்து தனது உயிரைப் பணையம் வைத்து நபியவர்களின் விரிப்பில் தூங்கினார்கள்.(1) குரைஷியர் அவரை நபியென நினைத்துக் கொண்டிருந்து, அவர்கள் ஏமாற்றப்பட்டது தெரியவந்ததும் அலீ (ரலி)

---

(1) ஹிஜ்ரத்தின் போது நபியவர்களின் விரிப்பில் அலீ (ரலி) அவர்கள் தூங்கிய சம்பவம் பரவலாக வரலாற்று நூல்களில் கூறப் பட்டுள்ளன. எனினும் அறிவிப்பாளர் வரிசை அடிப்படையில் இது பலவீனமானது. அதில் இடம்பெறும் உஸ்மான் அல்ஜஸரீ என்பவர் ஹதீஸ்கலை அறிஞர்களால் விமர்சிக்கப்பட்டவர் என்ற காரணத்தால் இது பலவீனமானது என்று அல்பானீ, அஹ்மத் ஷாகிர், ஷுஐப் அல்அர்னாஊத் போன்ற அறிஞர்கள் கூறியுள்ளனர். எனினும் ஹாபிழ் இப்னு ஹஜர் (ரஹ்) இச்சம்பவம் ஹஸன் தரத்திருள்ளதாகக் கூறினார்கள். (மொழிபெயர்ப்பாளர்)

அவர்களைத் துன்புறுத்தினார்கள். எனினும் அலீ (ரலி) அவர்கள் இதனைப் பொருட்படுத்தாது, நபியவர்கள் ஹிஜ்ரத் பயணிக்க முன் பொறுப்புச் சாட்டிய அமானிதங்களை உரியவர்களிடம் ஒப்படைக்கும் பணியில் ஈடுபட்டார்கள். இவர்கள் அறிவித்த 536 நபிமொழிகள் கிரந்தங்களில் பதியப்பட்டுள்ளன.

பூரண சந்திரன் போல் அழகிய முகம் கொண்டவராக அலீ (ரலி) அவர்கள் இருந்தார்கள். வீரம், புத்திக்கூர்மை, பேச்சாற்றல், அணியிலக்கணம் போன்றவற்றில் பிரசித்தி பெற்றிருந்தது போன்று நீதித்துறை, மார்க்கத்தீர்ப்பு, குர்ஆனிய அறிவு, அதன் விளக்கம் போன்றவற்றிலும் பிரசித்தி பெற்றிருந்தார்கள். தபூக் போரைத் தவிர அனைத்துப் போர்களிலும் நபியவர்களுடன் கலந்துகொண்ட இவர்களை அப்போரின் போது மதீனாவிற்குப் பிரதிநிதியாக நபியவர்கள் நியமித்தார்கள்.

இவர் சுவனத்தைக் கொண்டு நற்செய்தி சொல்லப் பட்டவராக உள்ளதுடன், மு∴மின்களின் தலைவராகவும் நான்காம் கலீபாவாகவும் மதீனாவில் உஸ்மான் (ரலி) அவர்கள் கொலை செய்யப்பட்ட பின் ஹி. 35ல் பதவிப்பிரமாணம் செய்யப்பட்டார்கள். கூபா நகரைத் தனது தலைமையகமாக எடுத்து 5 வருடங்களும் 3

மாதங்கள் ஆட்சி செய்தார்கள்.[1] அரசியல் ஸ்திரத்தன்மை அற்ற காலமாக இவரது ஆட்சிக்காலம் வர்ணிக்கப்படுகிறது.

பின்னர் கூபாப்பள்ளியில் அதிகாலைத் தொழுகை நிறைவேற்றிக் கொண்டிருக்கும் போது கவாரிஜ் (புரட்சிக்காரர்)களில் ஒருவன் அலீ (ரலி) அவர்களைக் குத்திக் கொலை செய்தான். ஹி 40ம் ஆண்டு ரமழான் மாதம் (கி.பி. 661ல்) இவர்கள் ஷஹீதாக்கப்பட்டார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) வுழூ அல்லது தயம்மும் இல்லாமல் தொழுவது ஹராம் என்பதை இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. கடமையான தொழுகை, மேலதிக தொழுகை, ஜனாஸாத் தொழுகை, ஸஜ்தா திலாவத், ஸஜ்தா

---

([1]) அலீ (ரலி) அவர்களது ஆட்சிக்காலம் 4 வருடங்களும் 9 மாதங்கள் எனவும் வரலாற்று நூல்களில் கூறப்பட்டுள்ளன. ஏனெனில் உஸ்மான் (ரலி) அவர்கள் ஹி. 35 துல்ஹஜ் மாதம்தான் 24ல் ஷஹீதாக்கப்பட்டார்கள். மறுதினம் இவர்கள் தெரிவுசெய்யப்பட்டார்கள். அலீ (ரலி) அவர்கள் ஷஹீதாக்கப்பட்டது ஹி. 40 ரமழான் மாதம். அதனடிப்படையில் 4 வருடங்கள் 9 மாதங்கள்தான் அவர்களுடைய ஆட்சிக்காலமாக உள்ளது. பார்க்க : தாரீகுத்தபரீ, உஸதுல் ∴காபஹ். (மொழிபெயர்ப்பாளர்).

ஷுக்ர் ஆகிய எந்தவொன்றுக்கும் இடையில் வேறுபாடு கிடையாது.(1)

---

(1) ஸஜ்தா திலாவத் மற்றும் நன்றிக்கான ஸஜ்தாவுக்கு வுழூ அவசியமா? என்ற விடயத்தில் அறிஞர்களுக்கு மத்தியில் கருத்து வெறுபாடுள்ளது. பெரும்பான்மையானோர் வுழூ அவசியம் என்ற கருத்தில் உள்ளனர். இப்னு உமர் (ரலி), ஷ.்.பீ (ரஹ்), இமாம் புஹாரீ ஆகியோர் வுழூ அவசியமில்லை என்ற கருத்திலுள்ளனர். இக்கருத்தை இப்னுதைமியா, இப்னுல் கைய்யிம், ஷௌகானீ போன்ற பிற்கால அறிஞர்களும் ஆதரித்துள்ளனர். தனியான ஸுஜூதுக்கு தொழுகையின் சட்டமா இல்லையா? என்ற கருத்து வேறுபாட்டின் அடிப்படையிலேயே இதிலும் கருத்து வேறுபாடு உருவாகியுள்ளது. இந்த இர ஸஜ்தாக்களுக்கும் வுழூ அவசியமில்லை என்பதே அஷ்ஷைஹ் இப்னு பாஸ் (ரஹ்) அவர்களும் கொண்டுள்ளார்கள். நபியவர்கள் அல்குர்ஆன் ஓதும்போது ஸஜ்தாவுடைய வசனம் ஓதப்பட்டால் ஸஜ்தா செய்வார்கள். கூட இருக்கும் நபித்தோழர்களும் ஸஜ்தா செய்வார்கள். எனினும் நபியவர்கள் வுழூ இல்லாமல் யாரும் ஸஜ்தா செய்ய வேண்டாம் எனத் தடுக்கவில்லை. ஒரு சபையில் அனைவரும் வுழூவுடன்தான் இருப்பார்கள் என்பதற்கான சாத்தியப்பாடுகள் குறைவு. அப்படியிருந்தும் நபியவர்கள் நபித்தோழர்களில் வுழூவில்லாதவர்கள் ஸுஜூது செய்ய வேண்டாம்

(2) ஹராமாக்கல், ஹலாலாக்கல் ஆகிய இருசொற்களும் தொழுகையுடன் தொடர்புபடுவதால் இந்நபிமொழியில் அதனுடன் சேர்த்துக் கூறப் பட்டுள்ளது. ஆரம்பத் தக்பீரானது தொழுகைக்கு முன் ஹலாலாக இருந்தவற்றை ஹராமாக்கி விடுகின்றது. இறுதியில் ஸலாம் கொடுப்பதானது தொழுகையில் ஹராமாக்கப் பட்டிருந்தவற்றை ஹலாலாக்கி விடுகின்றது.

(3) தொழுகையில் நுழைவதற்கு தஹ்ரீம் என்ற சொல் பயன்படுத்தக் காரணம், உண்ணல், பருகல் போன்ற இன்னோரன்ன செயற்கள் தொழும்போது ஹாராமாகி விடுகின்றன. நிய்யத்துடன் சேர்த்து அல்லாஹு அக்பர் என்ற தக்பீருடனே தவிர தொழுகையை ஆரம்பிக்க முடியாது.

(4) ஸலாம் கொடுப்பதன் மூலம் தொழுகையாளி தொழுகையிலிருந்து வெளியேறி விடுகின்றார். (தொழுகையில்) அவருக்கு ஹராமாக்கப்பட்டிருந்த விடயங்கள் இப்போது ஹலாலாகி விடுகின்றன. வலதுபுறமும் இடதுபுறமும் திரும்பி அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி என்று கூறுவதே ஸலாம் கொடுத்தல் எனப்படும்.

---

என்று தடுக்காமையும், வலுவான ஆதாரமின்மையுமே வுழூ அவசியமில்லை என்போர் கூறும் காரணமாகும். (பார்க்க: பதாவா நூருன் அலத்தர்ப்). (மொழிபெயர்ப்பாளர்)

### ஆஷுரா நோன்பின் சிறப்பு

٦٩ - عَــنْ أَبِــيْ قَتَــادَةَ ﷺ، أَنَّ النَّبِــيَّ ﷺ قَــالَ: "صِـيَامُ يَــوْمِ عَاشُوْرَاءَ، إِنِّيْ أَحْتَسِبُ عَلَى اللّٰهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِيْ قَبْلَهُ".

(جامع الترمذي، رقم الحديث ٧٥٢، وصحيح مسلم، جزء من رقم الحديث ١٩٦ - (١١٦٢)، وسنن أبي داود، جزء من رقم الحديث ٢٤٢٥، واللفظ للترمذي، ولم يحكم الإمام الترمذي هذا الحديث بشيء، وصححه الألباني).

(69) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஆஷுரா நோன்பானது, அல்லாஹ்விடம் அதற்கு முன்னைய வருடத்தில் ஏற்பட்ட குற்றங்களுக்கான பரிகாரமாக அமைய அல்லாஹ்விடம் எதிர்பார்க்கிறேன்.

அறிவிப்பவர் : அபூ கதாதா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 1162, அபூ தாவூத் 2425, திர்மிதீ 752. இவ்வார்தை திர்மிதீயில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 15ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஆஷூரா தினத்தில் நோன்பு நோற்பதை இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது. ஏனெனில் இந்த ஒருநாள் நோன்பினால் வருடம் முழுவதற்குமான சிறுபாவங்களிலிருந்து மன்னிப்புக் கிடைக்கின்றது.

(2) அல்லாஹ்வின் மாதம் என வர்ணிக்கப்படும் முஹர்ரம் மாதத்தின் 9ம் 10ம் நாட்களில் நோன்பு நோற்பது விரும்பத்தக்கது. ஏனெனில் நபியவர்கள் 10ம் நாள் நோன்பு நோற்றதுடன் (அடுத்த வருடத்திலிருந்து) 9ம் நாளிலும் நோன்பு நோற்க எண்ணியிருந்தார்கள். எனினும் 10ம் நாள் மாத்திரம் நோன்பு வைப்பது வெறுக்கத்தக்கது என்று கூற முடியாது.

(3) ஆஷூரா நோன்பு பல படித்தரங்களில் உள்ளது. அதில் குறைந்தபட்சம் 10ம் நாள் மாத்திரம் நோன்பு நோற்பது. அதை விட சிறந்தது 9 , 10 ஆகிய இரு நாட்களும் நோன்பு நோற்பது. இந்த மாதத்தில் எவ்வளவு நோன்பு பிடிக்க முடியுமோ அவ்வளவு சிறந்தது.

**புன்முறுவல் பூத்தலின் சிறப்பு**

٧٠ - عَـنْ أَبِـيْ ذَرٍّ ﷺ قَـالَ: قَـالَ لِـيَ الـنبيُّ ﷺ: "لاَ تَحْقِـرَنَّ مِـنْ الْمَعْرُوفِ شَيْئًا ، وَلَوْ أَنْ تَلْقَى أَخَاكَ بِوَجْهٍ طَلْقٍ".

(صحيح مسلم، رقم الحديث ١٤٤ - (٢٦٢٦)، ).

(70) நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள் : நல்லவிடயங்களில் எதனையும் இழிவாகக் கருதாதீர்கள். அது உனது சகோதரனை புண்முறுவலுடன் விழிப்பதாயிருந்தாலும் சரியே.

அறிவிப்பவர் : அபூ தர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2626.

அறிவிப்பாளர் பற்றி 10ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒரு முஸ்லிம் தனது சகோதரனை சந்திக்கும் போது இயல்பாகவும் புன்முறுவலுடனும், அக மகிழ்ச்சியுடனும் முன்னோக்க வேண்டும் என்பதை இந்நபிமொழி வேண்டி நிற்கின்றது.

(2) ஒரு முஸ்லிமுக்குக் கீழ் கணவன் அல்லது மனைவி, புதல்வர்கள் அல்லது புதல்விகள், மாணவர்கள் அல்லது மாணவிகள், வேலையாட்கள் இருந்தால் இந்நபிமொழியை அமுல்படுத்தும்

பொருட்டு இவர்களுடன் முகமலர்ச்சியுடனும் அகமகிழ்ச்சியுடனும் நடந்து கொள்ள வேண்டும். ஏனெனில் இவர்களும் உணர்வுகள், அபிலாசைகள் உள்ள மனிதர்கள்தான். எனவே அவர்களுக்கு மகிழ்ச்சியுடன் ஸலாம் கூறி, அவர்களின் சுகபோகங்களை விசாரித்து, ஏதாவது தேவைகள் இருக்கின்றதா என வினவினால் அவர்கள் உள்ளங்கள் மகிழ்ச்சியால் நிரம்பி வழியும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

(3) முகமலர்ச்சியுடன் புன்முறுவல் பூப்பது ஸதகாவாகுமென இந்நபிமொழி உணர்த்துகின்றது. நபியவர்கள் கூறினார்கள் : "உனது சகோதரனுடன் நீ புன்முறுவல் பூப்பதும் ஸதகாவாகும்" (திர்மிதீ 1956). எனவே புன்முறுவல் என்பது எமக்கு எதிரில் இருப்பவருக்கு நேசம், நிம்மதி, மகிழ்ச்சி ஆகியவற்றை கொண்டு சேர்க்கும் அழகான ஒரு காரியமாகும்.

**நபில் தொழுகைகள் வீட்டிலேயே சிறந்தது**

**٧١ - عَـنْ زَيْـدِ بْـنِ ثَابِـتٍ ﷺ، أَنَّ النَّبِـيَّ ﷺ، قَـالَ: "صَـلاةُ الْمَـرْءِ فِيْ بَيْتِهِ أَفْضَلُ مِنْ صَلاتِهِ فِيْ مَسْجِدِيْ هَذَا إِلاَّ الْمَكْتُوبَةَ".**

(سنن أبي داود، رقم الحديث ١٠٤٤، وصحيح البخاري، جزء من رقم الحديث ٧٣١، واللفظ لأبي داود، وصححه الألباني).

(71) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அடியானின் கடமையான தொழுகையைத் தவிர ஏனைய தொழுகைகள் என்னுடைய இந்த மஸ்ஜிதை விட தனது வீட்டிலே தொழுவதுதான் சிறந்தது.

அறிவிப்பவர் : ஸைத் பின் ஸாபித் (ரலி).

ஆதாரம் : புஹாரி 731, அபூ தாவூத் 1044. இவ்வார்தை அபூதாவூதில் இருந்து பெறப்பட்டது.

**🖊ஹதீஸ் அறிவிப்பாளர்:**

ஸைத் பின் ஸாபித் பின் ழுஹ்ஹாக் என்பவர் கண்ணியமிக்க நபித்தோழராகவும், வஹீ எழுதக் கூடியோரில் ஒருவராகவும் உள்ளார்கள். நபி (ஸல்) அவர்கள் மதீனா வரும் போது ஸைத் (ரலி) அவர்கள் 11 வயதையும் தாண்டாத ஓர் அநாதையாக இருந்தார்கள். தமது குடும்பத்தாருடன் இஸ்லாத்தில் இணைந்து கொண்டார்கள்.

புத்திக்கூர்மை, கல்வித்திறமை, மனன சக்தி, அமானிதம், தகவல் பரிமாற்றத்தில் நுணுக்கம், தான் வாசிப்பதை விளங்கும் ஆற்றல் போன்ற திறமைகளை நபியவர்கள் இவரிடத்தில் கண்ட போது வஹீயை எழுதும் பணிக்கு நியமித்தார்கள். இது ஒரு மகத்தான பணியாகும். மன்னர்களுக்கு அழைப்புப்பணி மேற்கொள்ள நபியவர்கள் விரும்பியபோது இவரிடம் அவர்களுடைய சில

மொழிகளைக் கற்குமாறு பணித்தார்கள். அரபு, ஸுரியானீ, பாரசீக மொழிகளைக் குறுகிய காலத்தில் கற்று, அவற்றில் தேர்ந்து விளங்கினார்கள்.

ஸைத் (ரலி) அவர்களின் சிறப்புக்கள் அதிகமானது. அவர்கள் தனது அறிவாலும், ஒழுக்கத்தாலும் மதீனாவில் ஒளித்துக் கொண்டிருந்தார்கள். தனக்கென உயர்வான இடத்தை எடுத்து, முஸ்லிம்கள் மத்தியில் மதிப்புக்குரியவராக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களிடம் அல்குர்ஆனைக் கற்று அவர்களிடமே ஓதியும் காட்டியுள்ளார்கள். உமர் (ரலி) அவர்கள் ஹஜ்ஜுக்குச் செல்லும்போது இவரைத் தனது பிரதிநிதியாக மதீனாவில் நியமித்து விட்டுச் செல்வார்கள். அதேபோன்று நீதித் துறைக்குப் பொறுப்பாக நிறுத்தி, அதற்கென ஒரு தொகையும் நியமித்தார்கள். ஆபூபக்ர் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோர் காலத்தில் அல்குர்ஆன் நூல்வடிவில் தொகுக்கப்பட்டதில் ஸைத் (ரலி) அவர்கள் பெரும்பங்களிப்பு செலுத்தினார்கள். இவர் அறிவித்த நபிமொழிகளின் எண்ணிக்கை 92 ஆகும். தனது 56வது வயதில் ஹி.45ல் மரணித்தார்கள்.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) கடமையல்லாத உபரியான தொழுகைகள் வீட்டில் தொழுவதே சிறந்ததென இந்நபிமொழி அறிவுறுத்துகின்றது. ஏனெனில் முழுமையன

உள்ளச்சத்திற்கும் உளத்தூய்மைக்கும் இது மிக நெருக்கமாயிருப்பதுடன் முகஸ்துதியை விட்டும் தூரமாயிருப்பதற்கும் வாய்ப்புக்கள் அதிகமுள்ளன. எனினும் கூட்டாகத் தொழப்படும், சூரிய சந்திரக் கிரகணத் தொழுகைகள், மழை தேடும் தொழுகை போன்ற ஸுன்னத்தான தொழுகைகளை பள்ளியில் கூட்டாக நிறைவேற்றுதே முஸ்லிமுக்கு சிறந்தது.

(2) கடமையான கூட்டுத்தொழுகை மற்றும் இருபெருநாட்கள், மழை தேடும் தொழுகை, சூரிய சந்திரக் கிரகணத் தொழுகைகள், தராவீஹ் போன்ற கூட்டாகநிறைவேற்றும் தொழுகைகளை மஸ்ஜிதுந்நபவியில் தொழுவது சிறந்தது. எனினும் ஏனைய ஸுன்னத்தான தொழுகைகளை வீடுகளிலே நிறைவேற்றுவது சிறந்தது.

**தஸ்பீஹ், தஹ்மீத், தஹ்லீல், தக்பீரின் சிறப்புக்கள்**

٧٢ - **عَـنْ أَبِـيْ هُرَيْـرَةَ ﷺ، قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللهِ ﷺ: "لأَنْ أَقُـوْلَ: سُـبْحَانَ اللهِ، وَالْحَمْـدُ للهِ، وَلاَ إِلَـهَ إِلاَّ اللهُ، وَاللهُ أَكْبَـرُ، أَحَـبُّ إِلَيَّ مِمَّا طَلَعَتْ عَلَيْهِ الشَّمْسُ".**

(صحيح مسلم، رقم الحديث ٣٢ - (٢٦٩٥)، ).

(72) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்" என்று கூறுவது சூரியன் உதிப்பதை விட எனக்கு மிக விருப்பமானது.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2695.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) மேற்கூறப்பட்டுள்ள நான்கு வார்த்தகைளுக்கும் அல்லாஹ் தனிச்சிறப்பு வைத்திருப்தானது, ஏனைய வார்த்தைகளை விட இவை உயர்ந்த இடத்தில் உள்ளன என்பதை இந்நபிமொழி எடுத்துக் காட்டுகின்றது. அவை : ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் என்பவையாகும்.

(2) இந்நான்கு வார்த்தைகளுக்கும் அல்லாஹ் மகத்தான கூலி வைத்திருப்பதால் இவற்றைக் கொண்டு அதிகமதிகம் அல்லாஹ்வை நினைவுகூர்தலை இந்நபிமொழி சுட்டிக்காட்டுகின்றது.

**தீயோரின் மீதே மறுமை உருவாகும்**

**٧٣ - عَـنْ عَبْـدِ اللهِ ﷺ عَـنِ الـنَّبيِّ ﷺ قَـالَ: "لاَ تَقُـوْمُ السَّـاعَةُ إِلاَّ عَلَى شِرَارِ النَّاسِ".**

(صحيح مسلم، رقم الحديث ١٣١ - (٢٩٤٩)، ).

(73) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மறுமை (இந்த சமூகத்தில்) தீயவர்கள் மீதுதானே தவிர உருவாகமாட்டாது.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2949.

அறிவிப்பாளர் பற்றி 3ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) அல்லாஹ்வை நம்பாத, எந்தவொரு நலவுமற்ற, விபச்சாரம் பரவக்கூடிய தீய மக்கள் மத்தியில்தான் நரகம் உருவாகும்.

(2) நல்லடியார்களுடைய உயிர்களைக் கைப்பற்ற குளிர்ந்த காற்றை அனுப்பி, அதன் மூலம் அவர்கள் மறுமை உருவாக முன் மரணித்து விடுவார்கள். மறுமை ஆரம்பிக்கும் வரை அவர்கள்

இருக்கமாட்டார்கள். அப்போது பூமியில் தீயோரைத் தவிர யாரும் மீதியிருக்கமாட்டார்கள். அவர்கள் மீது திடீரென மறுமை நிகழும்.

(3) மறுமைக்கு சற்று முன் தூய்மையான காற்று அனுப்பப்படும் வரை, (நபியவர்கள் வாக்களித்ததன் பிரகாரம்) உதவி செய்யப்படக் கூடிய, சத்தியத்திலேயே இருக்கும் அஹ்லுஸ்ஸுன்னா வல்ஜமாஅத்தினர் தொடர்ந்து இருப்பார்கள்.

### அநியாயம் ஹராமானது

٧٤ - عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ رَضِيَ اللّهُ عَنْهُمَا، أَنَّ رَسُوْلَ اللهِ ﷺ قَالَ: "الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لاَ يَظْلِمُهُ وَلاَ يُسْلِمُهُ، وَمَنْ كَانَ فِيْ حَاجَةِ أَخِيْهِ، كَانَ اللهُ فِيْ حَاجَتِهِ".

(صحيح البخاري، رقم الحديث ٦٩٥١، وصحيح مسلم، رقم الحديث ٥٨ - (٢٥٨٠)، واللفظ للبخاري).

(74) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு முஸ்லிம் மற்ற முஸ்லிமுக்கு சகோதரனாவான். அவனுக்கு அநீதியிழைக்க மாட்டார். (எதிரிகளிடத்தில்) அவனை ஒப்படைக்க மாட்டார். யார் தனது சகோதரனின் தேவையை நிறைவேற்ற வினைகிறாரோ அவருடைய தேவையை அல்லாஹ் நிறைவேற்றுகின்றான்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : புஹாரி 6951, முஸ்லிம் 2580. இவ்வார்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 22ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:

(1) ஒரு முஸ்லிம் அடுத்த முஸ்லிமுக்கு அநீதியிழைப்பதோ, அநியாயம் செய்வோரித்தில் விட்டுச்செல்வதோ கூடாது என்பதை இந்நபிமொழி அறிவிக்கின்றது. மாறாக அவனுக்கு உதவி

செய்து, அநியாயத்திலிருந்து அவனைப் பாதுகாக்க வேண்டும்.

(2) மக்களின் தேவைகளை இயன்றளவு நிறை வேற்றுவதை இந்நபிமொழி தூண்டுகின்றது. ஒருவனுக்கு தனது அவசியத் தேவைகளை நிறை வேற்ற வேண்டியிருந்தால் அவனுடை தேவையை நிறைவேற்ற உதவுவது முஸ்லிம்கள் மீது கடமையாகும்.

(3) அல்லாஹ் முஸ்லிம்களின் உள்ளங்களில் மிகிழ்ச்சி உருவாக்குவதை விரும்புவதுடன், அவர்களைக் கவலைக்கு உள்ளாக்குவதை வெறுக்கிறான் என்பது இந்நபிமொழியிலிருந்து விளங்கப்படுகின்றது. எனவே அடுத்தவர்களுக்கு மகழ்ச்சியைக் கொடுக்க முயற்சிப்பதும், கவலைக்குள்ளாக்காமல் இருப்பதும் முஸ்லிம்கள் மீது கடமையாகும்.

## சபையின் ஒழுக்கங்கள்

٧٥ -عَنْ أَبِيْ سَعِيْدٍ الْخُدْرِيِّ ﷺ قَالَ سَمِعْتُ رَسُوْلَ اللَّهِ يَقُوْلُ: "خَيْرُ الْمَجَالِسِ أَوْسَعُهَا".

(سنن أبي داود، رقم الحديث ٤٨٢٠، قَالَ العلامة محمد ناصر الدين الألباني عن هذا الحديث بأنه: صحيح).

(75) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சபைகளில் சிறந்தது விசாலமானதாகும்.

அறிவிப்பவர் : அபூ ஸஈத் அல்குத்ரீ (ரலி).

ஆதாரம் : அபூதாவூத் 4820. அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்.

**ஹதீஸ் அறிவிப்பாளர்:**

அபூ ஸஈத் அல்குத்ரீ என்ற (புனைப்பெயருள்ள) இவரின் பெயர் ஸ.்.த் பின் மாலிக் பின் ஸினான் அல்அன்ஸாரீ அல்கஸ்ரஜீ என்பதாகும். இவர் நபித்தோழர்களில் அறியப்பட்டவராகவும், சிறந்த அறிஞர்களிலொருவராகவும் உள்ளார். இவர் கலந்துகொண்ட முதல் யுத்தம் கன்தக் ஆகும். நபியவர்களுடன் 12 யுத்தங்களில் கலந்து கொண்ட இவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்த 1170 பொன்மொழிகள் நபிமொழிக் கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளன. தனது 86வது வயதில் ஹி. 74ல் மதீனாவில் மரித்து பகீஇல் அடக்கப்பட்டார்கள். (இவரது மரணத்திகதி பற்றி) வேறு கருத்துக்களும் கூறப்பட்டுள்ளன.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) சபைகள் விசாலமாக இருப்பது அவசியமாகும். அதனால் நெருக்கம், பதற்றம், தடுமாற்றமின்றி நிம்மதியாகவும், அமைதியாகவும், மகிழ்ச்சியுடனும் அதிகம் பேருக்கு உட்காரலாம். அதன் காரணமாகத்தான் விசாலமான சபைகளே சிறந்த சபைகளாகக் கருதப்படுகின்றன.

(2) தான் அமர்வதற்குப் பொருத்தமான இடத்தைத் தெரிவு செய்து கொள்வதும் சபைகளின் ஒழுக்கங்களிலுள்ளதாகும். எனவே பாதைகளிலோ, மக்கள் நடமாடும் இடங்களிலோ, (வேறு சிலருக்கென்று) ஒதுக்கப்பட்டுள்ள இடங்களிலோ அமரக்கூடாது.

**ருகூ஁. மற்றும் ஸுஜூதில் ஓதும் துஆ**

٧٦ - عَـنْ عَائِشَـةَ رَضِـيَ اللّـهُ عَنْهَـاأَنَّ رَسُـوْلَ اللهِ ﷺكَـانَ يَقُـولُفِيْ رُكُوْعِـهِ وسُـجُوْدِهِ: "سُـبُّوْحٌ قُـدُّوْسٌ، رَبُّ الْمَلَائِكَـةِ وَالرُّوحِ".

(صحيح مسلم، رقم الحديث ٢٢٣ - (٤٨٧)، ).

(76) நபி (ஸல்) அவர்கள் தனது ருகூ∴ மற்றும் ஸுஜூதில் “ஸுப்பூஹுன் குத்தூஸுன் ரப்புல் மலாஇகதி வர்ரூஹ்” என்று கூறுவார்கள். (குறைகள் மற்றும் இணைகளை விட்டும் தூய்மையானவன், வானவர்கள் மற்றும் ஜிப்ரீல் (அலை) அனைவரினதும் இறைவன்).

அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 487.

அறிவிப்பாளர் பற்றி 5ம் நபிமொழியில் கூறப் பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றுமுகமாக மேற்கண்ட தஸ்பீஹை ருகூ∴ மற்றும் ஸுஜூதில் சில சந்தர்ப்பங்களில் ஓதிக் கொள்வது முஸ்லிமுக்கு அவசியமாகும்.

(2) மேற்கண்ட நபிமொழியில் இடம்பெற்றள்ள 'ஸுப்பூஹ்' என்ற சொல்லின் விளக்கமானது, அல்லாஹ்வுக்குத் தகுதியில்லாத அனைத்தையும் விட்டு அவனை கண்ணியப்படுத்து, தூய்மைப் படுத்துவதாகும்.

குத்தூஸ் : அனைத்து உள்ரங்க வெளிரங்க குறை பாடுகளைவிட்டும் தூய்மையானவன்.

ரூஹ் : இதன் விளக்கத்தில் இரு கருத்துக்கள் உள்ளன :

1. ஜிப்ரீல்(அலை), இவருக்கு தனிச்சிறப்பிருப்பதால் ஏனைய வானவர்களைவிட இவரை சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

2. உயிர், அதாவது வானவர்களுடையவும், உயிர்களுடையவும் இறைவன் என்பதே இதன் பொருள். அல்லாஹ்வே மிக்க அறிந்தவன்.

(3) இந்நபிமொழியை வெளிப்படையாக நோக்கும்போது நபி (ஸல்) அவர்கள் சில சந்தர்ப்பங்களில் இந்த திக்ருகள் அனைத்தையும் ருகூ:விலும் ஸுஜூதிலும் ஓதுவார்கள் என்பதையே எடுத்துக் காட்டுகின்றது.

(4) நபி (ஸல்) அவர்கள் ருகூ:விலும், ஸுஜூதிலும் திக்ரையும், துஆவையும் கலந்தே ஓதுவார்கள் என்பதைத்தான் இந்நபிமொழி எடுத்துக்

காட்டுகின்றது. எனினும், “ருகூ:வில் இறைவனை (அதிகம்) துதியுங்கள், ஸுஜூதில் அதிகம் பிரார்த்தனை செய்யுங்கள், உங்கள் பிரார்த்தனை ஏற்கப்பட அது மிகவும் தகுதியானதாகும்” (அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரழி), ஆதாரம் : முஸ்லிம் 479) என்று நபியவர்கள் கூறியதானது, ஸுஜூதில் பெரும்பாலும் துஆவிலும், ருகூ:வில் பெரும்பாலும் திக்ரிலும் தஸ்பீஹிலும் ஈடுபடுவார்கள் என்ற கருத்தையே தருகின்றது. அதனால் ருகூ:வில் துஆக் கேட்பதோ, ஸுஜூதில் தஸ்பீஹ் திக்ருகள் செய்வதோ வெறுக்கத்தக்க செயலாக மாட்டாது.

### அல்லாஹ்வையும் மறுமையையும் விசுவாசிப்பதே அனைத்து நலவுகளுக்கும் அடிப்படை

٧٧ -عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺأَنَّ رَسُوْلَ اللّٰهِ ﷺ قَالَ: "مَنْ كَانَ يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ؛ فَلْيَقُلْ: خَيْرًا أَوْ لِيَصْمُتْ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ؛ فَلَا يُؤْذِ جَارَهُ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ؛ فَلْيُكْرِمْ ضَيْفَهُ".

(صحيح البخاري، رقم الحديث ٦٤٧٥، وصحيح مسلم، رقم الحديث ٧٤ - (٤٧)، واللفظ للبخاري).

(77) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகின்றாரோ அவர் பேசினால் நல்லதையே பேசட்டும் அல்லது வாய்மூடி இருக்கட்டும். யார் அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகின்றாரோ அவர் தனது அண்டை வீட்டாரைத் துன்புறுத்தாமலிருக்கட்டும். மேலும் யார் அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகின்றாரோ அவர் தனது விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 6475, முஸ்லிம் 47. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

☞**ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) நாவைப் பாதுகாப்பதிலும், அதிக தர்மம் வழங்கி, உபசரிப்பதிலும் இந்நபிமொழியே பிரதான அடிப்படையாகும்.

(2) அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புவதே அனைத்து நலவுகளுக்கும் அடிப்படை, இவ்விரண்டும் அல்லாஹ்வை கண்ணியப் படுத்துவதுடன், அவனது கட்டளைகளைக் கண்காணித்துச் செய்யத் தூண்டுகின்றது.

(3) நல்லவார்த்தைகளைப் பேச இந்நபிமொழி ஆர்வமூட்டுகின்றது. அல்லாஹ்வும் அவனது தூதரும் கடமையாக்கிய அல்லது விரும்பிய அனைத்து வார்த்தைகளும் நல்ல வார்த்தைகளே.

(4) இஸ்லாம் அண்டைவீட்டாரின் உரிமைகளில் கவனமெடுத்து அவர்களை கண்ணியப் படுத்துகின்றது. அதனால்தான் அவர்களை மதித்து, உபசரித்து, நோவினை செய்யாமலிருப்பதை முஸ்லிமுக்குக் கடமையாக்கி இருக்கின்றது. அந்த அண்டை வீட்டார் முஸ்லிமாகவோ அல்லது முஸ்லமல்லாதவராகவோ இருக்கலாம்.

(5) விருந்தாளிகளைக் உபசரிப்பது பரிபூரண ஈமானின் வெளிப்பாடாகும். இஸ்லாமியப் போதனைகள் அழைக்கும் பண்பாட்டு மேன்மைக்கு இதுவும் முக்கிய அம்சமாக உள்ளது.

**கவனையீனத்தை விட்டும் எச்சரிக்கை**

٧٨ -**عَنْ أَبِيْ هُرَيْرَةَ ﷺعَنِ النَّبِيِّ ﷺأَنَّهُ قَالَ: "لاَ يُلْدَغُ الْمُؤْمِنُ مِنْ جُحْرٍ وَاحِدٍ مَرَّتَيْنِ".**

(صحيح البخاري، رقم الحديث ٦١٣٣، وصحيح مسلم، رقم الحديث ٦٣ - (٢٩٩٨)، واللفظ للبخاري).

(78) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு விசுவாசி ஒரே புற்றிலிருந்து இரு முறை தீண்டப்பட மாட்டான்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 6133, முஸ்லிம் 2998. இவ்வார்த்தை புஹாரியில் இருந்து பெறப்பட்டது.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒரே இடத்தில் இரு முறை ஏமாறாமல், உறுதியாகவும், புத்தியுடனும், விழிப்பாகவும்ம் இருப்பதுடன், கவனையீனமாகவோ அடிக்கடி தவறு செய்பவனாகவோ ஒரு முஸ்லிம் இருக்கக் கூடாது என்பதை இந்நபிமொழி வேண்டி நிற்கிறது.

(2) காரணகாரியங்களை வழிமுறைகளுடன் தொடர்புபடுத்தி, புத்தியைப் பயன்படுத்துவதே முஸ்லிமின் அடிப்படை என்று இந்நபிமொழி கூறுகின்றது. ஏனெனில் நபியவர்கள் தனக்கு வஹீ இறங்கியும் கூட, காரணங்களைப் பயன்படுத்தி, திட்டமிட்டு, முடிந்தளவு எதிரிகளுக்கு முகம் கொடுத்தார்கள்.

## உபகாரம் செய்தவருக்கான சிறந்த துஆ

٧٩ - عَـنْ أُسَـامَةَ بْـنِ زَيْـدٍ رَضِـيَ اللهُ عَنْهُمَـا قَـالَ: قَـالَ رَسُـوْلُ اللهِ ﷺ: "مَـنْ صُـنِعَ إِلَيْـهِ مَعْـرُوْفٌ؛ فَقَـالَ لِفَاعِلِـهِ: جَـزَاكَ اللهُ خَيْـرًا؛ فَقَدْ أَبْلَغَ فِي الثَّنَاءِ".

(جامع الترمذي، رقم الحديث ٢٠٣٥، قال الإمام الترمذي عن هذا الحديث بأنه: حسن جيد غريب، وقال العلامة محمد ناصر الدين الألباني عن هذا الحديث بأنه: صحيح).

(79) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு நலவு செய்யப்பட்டு அதனைச் செய்தவருக்கு ஜஸாகல்லாஹு கைரா (அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவானாக) என்று கூறினால் அவர் நன்றி செலுத்துவதில் உயரத்தை அடைந்து விட்டார்.

அறிவிப்பவர் : உஸாமா பின் ஸைத் (ரலி).

ஆதாரம் : திர்மிதீ 2035. அவர்கள் இதனை ஹஸன் ஜய்யித் கரீப் எனும் தரத்திருள்ளதாகவும் அஷ்ஷேஹ் அல்பானீ இதனை ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகவும் கூறியுள்ளார்.

அறிவிப்பாளர் பற்றி 36ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) ஒருவர் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் செய்யப்போகும் ஒருவருக்கு இயலாமல் போனால், அல்லாஹ் அவருக்கு ஈருலகிலும் முழுமையான கூலியை வழங்க அவனிடமே அவரைப் பொறுப்புச் சாட்டிவிட வேண்டும். அவன் “ஜஸாகல்லாஹு கை.்.ரா” என்று கூற வேண்டும். அவ்வாறு கூறினால் பரிபூரணமான நன்றியை செலுத்திப் பிரதியுபகாரம் செய்துவிட்டார் என்பதாகவே கருதப்படும்.

(2) பிரதியுபகாரம் என்பது மக்கள் நிலையைப் பொறுத்தது. சிலர் தாம் பெற்றுக்கொண்டதைப் போலவோ அல்லது அதிகமாகவோ பிரதியுபகாரம் செய்வர். சிலருக்கு அருட்பாக்கியங்களுக்காக துஆக் கேட்பதே அவர்களுக்குச் செய்யும் பிரதியுபகாரமாகும். ஏனெனில் வசதி அந்தஸ்து உள்ளவர்களுக்கு பணத்தால் பிரதியுபகாரம் செய்வதை விட துஆக் கேட்பதே சிறந்தது.

அதற்கான சிறந்த துஆதான் நபிமொழயில் வந்துள்ள மேற்கண்ட துஆவாகும். அதன் விளக்கமாவது: அல்லாஹ் உங்களுக்கு சிறந்த கூலியைத் தருவானாக, அல்லது அல்லாஹ் உங்களுக்கு ஈருலகிலுமுள்ள சிறந்தவற்றைத் தருவானாக என்பதாகும்.

**தௌபாச் செய்வதன் அவசியம்**

**٨٠ - عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ رَضِيَ اللهُ عَنْهُمَا، قَالَ:قَالَ رَسُولُ اللهِﷺ: "يَا أَيُّهَا النَّاسُ تُوْبُوْا إِلَى اللهِ؛ فَإِنِّيْ أَتُوْبُ فِي الْيَوْمِ إِلَيْهِ مِائَةَ مَرَّةٍ".**

(صحيح مسلم، رقم الحديث ٤٢ - (٢٧٠٢)،).

(80) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மக்களே அல்லாஹ்விடம் (பாவமன்னிப்புத் தேடி) மீளுங்கள். ஏனெனில் நான் ஒரு நாளில் நூறு தடவை அவனிடம் (பாவமன்னிப்புத் தேடி) மீளுகிறேன்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் 2702.

அறிவிப்பாளர் பற்றி 13ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

**☞ஹதீஸிலிருந்து பெறப்பட்ட பாடங்கள்:**

(1) தௌபா இஸ்லாத்தின் அடிப்படைகளுள் ஒன்றாகவும், அல்லாஹ் விரும்பும் சிறந்த அமல்களுள் ஒன்றாகவும் உள்ளது. அதனால்தான் ஒவ்வொரு பாவத்திலிருந்தும் உடனடியாகத்

தௌபாச் செய்வது முஸ்லிமுக்கு அவசியமாக இருக்கின்றது.

(2) தௌபாவானது பாவங்களை அழித்து, உள்ளத்தைத் தூய்மையாக்கி, பாவங்களை நன்மைகளாக மாற்றி, அல்லாஹ்வின் நேசத்தைப் பெற்றுத் தருவதுடன், தீமையிலிருந்து நன்மையின் பக்கம் கொண்டு செல்கின்றது.

(3) அல்லாஹ்வின் அருளிலிருந்து நிராசை அடையாமல், அவன்மீது நல்லபிப்பிராயம் கொண்டவனாக இருப்பது மனிதனுக்கு அவசியமாகும். ஏனெனில் மனிதன் எவ்வளவுதான் தவறு செய்தாலும் உண்மையாகத் தௌபாச் செய்யும் பட்சத்தில் அல்லாஹ் அவனுடைய தௌபாவை ஏற்று பாவங்களை மன்னிக்கின்றான்.

(4) பாவங்கள் எவ்வளவு பெரியதாக இருந்தாலும் அதற்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத்தேடி மீளுவதை இந்நபிமொழி தூண்டகின்றது. எனினும் அதன் நிபந்தனைகள் பரிபூரணமாகாமல் அல்லாஹ்விடத்தில் அத்தௌபா ஏற்கப்படமாட்டாது. அவை :

1. அது அல்லாஹ்வுக்காக என்ற தூய எண்ணத்துடன் இருக்க வேண்டும். உலகாதாயங்கள் மக்களின் புகழ் ஆகியன எதிர்பார்க்கப்பட கூடாது.

2. செய்யும் பாவத்தை விட்டும் நீங்கிவிட வேண்டும்.

3. அப்பாவத்திற்காகக் கவலைப்பட வேண்டும்.

4. மீண்டும் அதைச் செய்யமாட்டேன் என்று உறுதிகொள்ள வேண்டும்.

5. அப்பாவம் அடுத்தவர்களுடைய உரிமைகளுடன் சம்பந்தப்பட்டிருந்தால் அதற்காக சம்பந்தப்பட்டவரை அனுகி மன்னிப்புக்கேட்டோ அல்லது உரிமையைத் திருப்பிக் கொடுத்தோ பிரச்சினையை முடித்துக் கொள்ள வேண்டும்.

6. உயிர் தொண்டைக்குழியை அடைய முன்னாலும், சூரியன் மேற்கிலிருந்து உதிக்க முன்னாலும் இத்தொளபா அமைய வேண்டும்.

நற்கருமங்கள் எவனின் அருளால்
பூர்த்தியாகின்றனவோ அந்த அல்லாஹ்வுக்கே
எல்லாப் புகழும். சாந்தியும் சமாதானமும் எங்கள்
தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்கள்
கிளையார்கள் தோழர்கள் அனைவர் மீதும்
உண்டாவதாக.